# ஆனந்த  போதினி

"எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு."—திருவள்ளுவர்.

தொகுதி 30 | தாரண௵ ஆடிமீ ௧௨ 1944௵ ஜூலைமீ 16உ | பகுதி 1

## கடவுள் வணக்கம்.

சூடியவிலயஞ் சதி பிழையாமைக்
கொடியிடை யுமையவள் காண
ஆடிய அழகா! அருமறைப் பொருளே!
அங்கணா! எங்குற்றாய் என்று
தேடிய வானோர் சேர்திருமுல்லை
வாயிலாய்! திருப்புகழ் விருப்பால்
பாடிய அடியேன் படுதுயர் களையாய்;
பாசுபதா! பரஞ்சுடரே. (1)

சந்தனவேருங் காரகிற் குறடும்
தண்மயிற் பீலியுங் கரியின்
தந்தமுந் தரளக் குவைகளும் பவளக்
கொடிகளும் சுமந்துகொண்டு உந்தி
வந்திழிபாலி வடகரை முல்லை
வாயிலாய் மாசிலா மணியே!
பந்தனை கெடுத்தென் படுதுயர் களையாய்
பாசுபதா! பரஞ்சுடரே. (2)

மணிகெழு செவ்வாய் வெண்ணகைக்
கரியவார் குழல்மா மயிற்சாயல்
அணிகெழு கொங்கை அங்கயற் கண்ணார்
அருகட்மாட் லருத
திணிபொழில் தழுவு திருமுல்லைவாயிற்
செல்வனே! எல்லியும் பகலும்
பணியது செய்வேன் படுதுயர் களையாய்
பாசுபதா! பரஞ்சுடரே. (3)

சியவர்களுக்கும் தக்கபடி ஊதியம் அளிப்பதில்லை. தங்களுடைய அறிவையும் உழைப்பையும் உபயோகித்து அல்லும் பகலும் தாங்கள் மேற்கொண்டிருக்கும் பத்திரிகைகளின் முன்னேற்றத்துக்காகப் பாடுபட்டு வரும் பத்திராகாசிரியர்களின் செல்வ நிலையும் வாழ்க்கைத் தரமும் உயராவிட்டால், அவர்கள் வாழ்க்கையில் உற்சாகமாக எப்படியிருக்கமுடியும்? இவ்விதம் பத்திரிகைத் தொழிலில் ஈடுபட்டுள்ளவர்களின் பரிதாப நிலையை மனத்திற் கொண்டுதான், "பத்திரிகைத் தொழிலில் ஈடுபட்டிருப்போரின் நிலைமையைச் சீர்படுத்த வேண்டியது அவசியம். பத்திரிகைகளின் நிலை இப்போது செல்வத் துறையில் சீர்பட்டிருக்கிறது. அவற்றின் செல்வாக்கும்,' தகுதியும் உயர்ந்திருக்கின்றன. ஆகவே, பத்திரிகைத் தொழிலில் ஈடுபட்டிருப்பவர்களுக்கு நல்ல சம்பளம் ஏன் கொடுக்கக் கூடாது? அவர்களுக்கு விடுமுறை முதலிய வசதி அளிப்பதில் தாராள நோக்குடன் விதிகள் இயற்ற வேண்டும். 'பிராவிடண்ட்' நிதித் திட்டம், பென்ஷன் வசதி, வயோதிக உதவி முதலியவற்றையும் கவனிக்க வேண்டும்" என்று ஜனுப் பிரெல்வியும் கே. பொன்னையாவும், துஷார் காந்தி கோஷும் கூறியிருக்கின்றனர். மேற்படி மகாநாட்டிலும் "பத்திரிகைத் தொழிலில் ஈடுபட்டிருக்கும் சிப்பந்திகளின் பொருளாதார நிலையை உயர்த்த, பத்திரிகை முதலாளிகள் வழி தேடவேண்டும்" என்று ஒரு தீர்மானமும் நிறைவேறியிருக்கிறது. பத்திரிகைத் தொழிலில் ஈடுபட்டிருப்போரின் செல்வ நிலைமையைப் பரிசிலனை செய்ய அ. இ. பத்திரிகாசிரியர் கமிட்டி ஒரு தனிக் கமிட்டியை நியமித்திருக்கிறது. அதன் சிபார்சுகளால் பயனேற்படக் கூடும் என்று நாம் நம்புகிறோம்.

நம் நாட்டில் நடைபெற்று வரும் பத்திரிகைகள், தினசரிகளாயினும் சரி, வார, பக்ஷ, மாதப் பத்திரிகைகளாயினும் சரி, ஜன சமூகத்துக்குச் சேவை செய்யும் முறையில் நல்லவிதமாக நடக்கவேண்டுமானல், நாம் மேற்குறித்தவாறு, அரசாங்கத்தின் உதவி முக்கியமாக இருக்கவேண்டும். அடுத்தபடியாக, பத்திரிகைளை நடத்தும் முதலாளிகள், பணத்தைப் பெருக்கும் குறிக்கோளுடன் மட்டும் இல்லாமல் சேவா லட்சியத்தோடு நடந்து, பத்திரிகாசிரியர்கள், மற்றும் சிப்பந்திகளுக்கு ஊதிய மளிக்கும் வகையில் தாராள மனேபாவங் காட்டவேண்டும். அதற்கும் மேலாக, தேச மக்களின் பேராதரவு பக்கபலமாக இருக்கவேண்டும். இவ்விதம் பலவகையிலும், பத்திரிகைகளுக்கு ஆதரவும் ஒத்துழைப்பும் இருந்தால் தான் அவைபுரியுந் தொண்டு—ஜன சமூக சேவை—பயனுடையதாக இருக்கும் என்று நாம் கூற விரும்புகிறோம்.

அம்பலவாணன் மீது அவள் கொண்ட அடங்காக் காதல் அவளது நாணத்தை மறக்கச் செய்தது! ஏன்? பெண்மையையே மறக்கச் செய்தது! பெற்றோர் உற்றாரை மறக்கச் செய்தது! உலக ஒழுக்கத்தை மறக்கச் செய்தது! அவள் தன்னையே மறந்து விட்டாள் என்றும், அதிகஞ் சொல்வானேன்!

**வையத்துக்கேற்ற காவியம்**

# ஆத்ம ஸமர்ப்பணம்

"மைவண்ணன்"

"அம்பலவாணன்! என்ன அழகான பெயர்! நடராஜன் என்றும் அவனை நானிலத்தார் நவில்வார்களாமே! அதுவும நாகரிகமாகத்தான் இருக்கிறது......அம்பலவாணன்! நடராஜன்! அம்பலவாணன்!! நடராஜன்!! அ-ம்-ப-ல-வா-ண-ன்-!!!......ந-ட-ரா-ஜ-ன்!!!'

இவ்விதம் அழகிய நங்கையொருத்தி தனக்குத்தானே கூறிக்கொண்டிருந்தாள். செஞ்ஞாயிறு மேல்வானத்தைப் பொன் வண்ணமாக்கிக்கொண்டு கடலில் மூழ்குவதையும் அவள் கவனிக்கவில்லை. இனிய தென்றற்காற்று ரமணீயமாக வீசி அவளது மேலாடையை நெகிழச் செய்வதையும் அவள் அறியவில்லை. மலர்தோறும் சென்று தேன் உண்டு மயங்கிய கருவண்டுகள், பசிய கொடிகளின் இடையே மலர்ந்த செந்தாமரை மலர் என்று எண்ணி அவளது மதிவதனத்தைச் சுற்றிச் சுற்றி வட்டமிட்டு ரீங்காரஞ் செய்வதையும் அவள் விலக்கி ஓட்டவில்லை. பன்னிறப் பூக்களின் நறுங்காற்றுங்கூட அவளது மூக்கைத் துளைக்கவில்லை. அம் மாலை நேரத்தில் இயற்கைதேவி செய்து காட்டிய இந்திர ஜால வித்தைகளும் அவளுடைய கண்களைக் கவர்ந்ததாகத் தெரியவில்லை. குயில் முதலிய பறவைக் கூட்டங்கள் எழுப்பிய இனிய ஓசை கூட செவி வழியாகப் போய் அவளது இதயத்தைக் கனியச் செய்தது என்று கூறுவதற்கில்லை. அவ்வளவு தூரம் அவள் தன்னை மறந்து அம்பலவாணனுடைய பிரபாவத்தில் ஆழ்ந்திருந்தாள்.

சுந்தரியின் சுற்றத்தார் சிதம்பரம் போய்விட்டு முன்னாள்தான் திரும்பி வந்தனர். அவர்கள் அனைவரும் அம்பலவாணனின் அருள் திருவிளையாடலைப் பற்றியும் அலகிலாப் பெருமையைப் பற்றியும் அளவில்லாமல் கூறலாயினர். சிலர் நடராஜப் பெருமானது ஆயிரம் திருநாமங்களை அழகுபடக் கூறி மனனம் பண்ணலாயினர். மற்றுஞ் சிலர், கூத்தரசனின் திருக்கோலத்தைக் குறித்துப் பலபட வருணிக்கலாயினர். "குனித்த புருவத்தின் எழில் என்ன! கொவ்வைச் செவ்வாயில் திகழும் குமிண் சிரிப்பின் மின்னொளி என்ன! பனித்த சடையின் பான்மை என்ன! பவளம் போன்று சிவந்த மேனியில் விளங்கும் பால் வெண்ணீற்றின் தாவள்யம் என்ன! இனித்தமுடைய எடுத்த பொற்பாதத்தின் ஏற்றம் என்ன! அவனது முகத்தில் இலங்கும் திருக்குறிப்பைக்

கண்டால், நம்மையெல்லாம் பார்த்து, "நீங்கள் எப்போது வந்தீர்கள்?" என்று கருணையுடன் கேட்பதுபோ லல்லவா இருக்கிறது? அந்த ஆணிப் பொன்னம்பலத்தே ஐயன் ஆடும் அற்புதக் கூத்தை நம் வாணுள் முழுவதும் பார்த்துக்கொண்டிருக்கலாமே! அந்த அற்புதக் காட்சியைக் காண்பதற்காக வாயினும் நமக்குப் பிறவி வேண்டும்; அதுவும் மனிதப் பிறப்பு வேண்டும். இப் பிறப்பில் நம்மை ஆட்கொண்டு இனி ஏழேழ் பிறவிக்கும் இருவினைகளின் இன்னல்க ளில்லாமல் தவிர்ப்ப தொன்றுண்டானல், தில்லையுள் சிற்றம்பலத்து நடனம் ஆட எடுத்திட்ட குஞ்சிதபாத மொன்றுதான்" என்றெல்லாம் அவர்கள் வாயாரக் கூறி உடல் புளகங் கொள்ளலாயினர்.

இன்னுஞ் சிலர், அம்புலவாணன் அநவரதம் ஆனந்த தாண்டவம் புரியும் அணிதில்லை நகரைப்பற்றி அளவில்லாத வார்த்தைகளால் அடுக்கிக்கொண்டே போகலாயினர். அவர்கள் 'ஏதோ தில்லைச்சிற்றம்பலம் போனேம்; அம்பலவாணன் ஆடும் அற்புதக் கூத்தைக் கண்டோம்; திரும்பி வந்தோம்; தாங்கள் கண்ட அற்புதக் காட்சியை மற்றவர்களுக்குக் கூறினேம்; வேலையைப் பார்த்தோம், என்று இல்லாமல், திரும்பி வந்ததிலிருந்து அல்லும் பகலும் அறுபது நாழிகையும் அம்பலவாணனது பிரபாவத்தைப் பற்றியே பேசிக் கொண்டிருந்தது சுந்தரியைப் பைத்தியமாய் அடித்து விட்டது.

அம்பலவாணன் பெயரைக் கேட்ட மாத்திரத்திலேயே சுந்தரி தன் உள்ளத்தை அவனிடம் பறி கொடுத்து விட்டாள். அவன் இருக்கும் வண்ணத்தைச் செவியேற்றதும், அவள் தன் இதய கமலத்தில் மூர்த்திக்கு இடம் அளித்து விட்டாள். திருச்சிற்றம்பலத்துச் சிறப்பையும் இரகசியத்தையும் அறிந்தவுடனேயோ, அவளது நுண்ணுடல் சிதாகாரத்துக்குப் போயேவிட்டது. பருவுடல்தானே அவளுடன் இருந்தது. ஆகவே, அவள் நடராஜனின் நாமங்களை நினைந்து நினைந்து, அவனது தூக்கிய திருவடியின் திருக்கோலத்தைச் சிந்தித்துச் சிந்தித்து, அணி தில்லையம்பலத்தை வந்தித்து வந்தித்து உன்மத்தங் கொண்டுவிட்டாள்.

"நமக்கு வாய்ந்திருப்பது அருமையான மனிதப்பிறவி! இப்பிறவி தப்பினல் எப்பிறவி வாய்க்குமோ! யாது வருமோ அறியேன்! ஆதலால், தில்லையம்பலத்துக் கூத்தனுக்கு ஆட்பட்டிருப்பதுதான நந்தம் கூழைமை யாகும்" என்று அவள் எண்ணினாள். முடிகொண்ட மூன்றும் பிறைச்சந்திரனும், முக்கண்ணின் நோக்கும் முறுவலிப்பும், துடி கொண்ட கையும் துதைந்த வெண்ணீறும், சுரிகுழலாள் படி கொண்டாட பாகமும் பாய்புலித் தோலும் அவள் நெஞ்சில் நிரந்தரமாகக் குடி கொண்டுவிட்டது. ஆகவே, அவள் கூத்தப் பிரானது நடன போதையில் மயங்கி, "சிற்றம்பலத்துக் கூத்தனில் கூத்து வல்லார் உளரோ!" என்று தன்னைத்தானே கேட்டுக்கொள்ளுகிறாள்.

"செய்ஞ்ஞின்ற நீலமலர்நின்ற தில்லைச் சிற்றம்பலவன்
மைஞ்ஞின்ற வொண்கண் மலைமகள்கண்டு மகிழ்ந்துநிற்க;
மெய்ஞ்ஞின்று எரியும் விளக்கொத்த நீலமணி மிடற்றான்
கைஞ்ஞின்ற ஆடல்கண்டால் பின்னைக் கண்கொண்டு காண்பது [என்னே !"

என்று குழலினும் இனிய குரலில் பாடி விம்மித முறுகிறாள்.

நாழிகை ஆக ஆக, சுந்தரிக்கு நடராஜப் பித்தம் அதிகமாகிறது. இனி, அப் பெருமானைக் காணாமல், அரைக்கணமும் இருக்க முடியாது என்று அறிந்தாள். ஆகவே, அவள் தன்னைப் பத்து மாதம் சுமந்து பெற்றெடுத்துக் கண்ணுங் கருத்துமாக வளர்த்து காப்பாற்றி வரும் அம்மையையும் தந்தையையும் துறந்து செல்லத் துணிகிறாள். 'தன் உள்ளத்தைக் கொள்ளை கொண்ட காதலனை அடைவதற்காகப் பெற்றோரைப் பிரிந்து செல்லலாம்; ஆனால், ஊரார் சும்மா இருக்கமாட்டார்களே! அவர்கள் வாய்க்கு வந்தவாறு பிதற்றத் தொடங்கி விடுவார்களே! சமூகக் கட்டுப்பாடு இருக்கிறதே! மங்கைப் பருவமடைந்தவள் தன் இல்லத்தைவிட்டு என்றுஒன்று எக்காரணத்தைமுன்னிட்டும் தனிவழி ஏகலாகாது; மணாளன் மங்கையை நாடி வரவேண்டுமே யொழிய, இவள் அவனை நாடிச்செல்வது அழகல்லவே!' இதெல்லாம் உலகாசாரத்தை யொட்டிய சொற்கள். இதையெல்லாம் கூட உதறி எறிந்துவிட்டுச் செல்ல மனங்கொண்டாள். அம்பலவாணன் மீது அவள் கொண்ட அடங்காக்காதல், அவளது நாணத்தை மறக்கச் செய்தது! என்? பெண்மையையே மறக்கச்செய்தது! பெற்றோர் உற்றாரை மறக்கச் செய்தது! குடும்பப் பெருமையை மறக்கச் செய்தது! உலக ஒழுக்கத்தை மறக்கச் செய்தது! சகலத்தையும் மறக்கச் செய்தது! அவள் தன்னையே மறந்து விட்டாள் என்றால், தன் பெயரையே மறந்து விட்டாள் என்றால்; அதிகஞ் சொல்வானேன்!

சாதாரணமாக, மங்கையர் தன் மனத்துக்குகந்த மணாளனைக் கண்டு காதலித்து, களவு முறையில் அளவளாவி, பெற்றோர் தன் காதற்குறிப்பை யறிந்து, தன்னால் விரும்பப்பட்டவனுக்குத் தன்னைத் திருமணஞ் செய்து கொடுக்க வில்லையென்றால், காதலனுடன் போய்விடுவது நீண்ட நாளைய வழக்கமாக இருந்து வருகிறது. ஆனால், சுந்தரியோ, தன் காதலனைப் பிறர் வாயிலாக அறிகிறாள். கேள்வி மாத்திரையால் காதல் கொள்கிறாள். அதாவது காதலனைக் காணாமே காதல் கொள்ளுகிறாள். 'ஒருதலை காமந் தானே! அவன் உருவத்தை, நடன வல்லபத்தை, புகழை, பெருமையை, பரத்துவத்தைக் கேட்டு நாம் அவன் மீது காதல் கொண்டிருக்கிறோம். ஆனால், நம்மால் காதலிக்கப்படும் அவன் நம்மை விரும்புவானா? நம் காதலை யேற்றுக் கொள்ளுவானா!' என்று கூட அவள் எண்ணிப் பார்க்கவில்லை. சுந்தரி ஒன்றையும் யோசியாது, பெற்றோரைப் பிரிந்து, இல்லத்தைத் துறந்து, சமூகத்தைப் புறக்கணித்து, தன் பெண்மையை மறந்து தன்னந் தனியளாய், பகலென்றும், இரவென்றும், வெயிலென்றும், மழையென்றும், பனியென்றும் பாராது திருத்தில்லையை

நோக்கிச் செல்கிறாள். அம்பலவாணன் நட்டனமாடும் ஆலய கோபுரத்தின் சிகரம் அவளது கண்களுக்குத் தெரிகிறது. உடனே அவள் ஊணுறக்கம் இல்லாததாலும், நீண்ட வழிப் பிரயாணத்தாலும் ஏற்பட்டிருந்த களைப்பை யெல்லாம் உதறிவிட்டு ஓடுகிறாள் சிற்றம்பலத்தை நாடி. என் அப்பன் அம்பலவாணனின் ஆனந்த தாண்டவதரிசனங் கிடைக்கிறது அவளுக்கு.

"படைக்கலமாக உன்நாமத்து எழுத்து அஞ்சு
 என்நாவிற் கொண்டேன்
இடைக்கலம் அல்லேன் எழுபிறப்பும் உனக்கு
 ஆட்செய் கின்றேன்
துடைக்கினும் போகேன் தொழுதுவணங்கித்
 தூநீறு அணிந்துஉன்
அடைக்கலங் கண்டாய் அணிதில்லைச்
 சிற்றம்பலத்து அரனே!"

என்று நாத் தழுதழுக்கப் பாடி, ஆனந்தக் கண்ணீர் வடித்து, அம்பலவாணனது குஞ்சித பாதத்தைத் தஞ்சமடைகிறாள்.

இக் காதல் பெருநிலையைத் தான் திருநாவுக்கரசர் கீழ்வரும் திருப்பாட்டில் படம்பிடித்துக் காட்டுகிறார்.

"முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள்
 மூர்த்தி அவன்இருக்கும் வண்ணம் கேட்டாள்
பின்னை அவனுடைய ஆரூர் கேட்டாள்
 பெயர்த்தும் அவனுக்கே பிச்சியானாள்
அன்னையையும் அத்தனையும் அன்றே நீத்தாள்
 அகன்றாள் அகலிடத்தார் ஆசாரத்தைத்
தன்னை மறந்தாள் தன்நாமங் கெட்டாள்
 தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே!"

இது உலக நிலையில் ஓர் உயரிய காதல் நாட்டம்; ஞான நிலையில் இதுஒருசிறந்த பேரின்ப நாடகமாகும். லௌகிகத்தில் ஒருத்தி தனக்கொத்த ஒருவனிடங் காதல் கொண்டு உடல் பொருள் ஆவி மூன்றையும் ஒப்படைத்து உண்மை யின்பத்தை எப்படி அடைகிறாளோ, அதுபோல, பாரமார்த்திக நிலையில், மக்கள் எல்லாம் வல்ல இறைவன்பால் பக்திபூண்டு சர்வ சங்கப் பரித்தியாகஞ் செய்தால் பேரின்ப நிலையை யடையலாம். இப்படி, மக்கள் ஆண்டவன்பால் தங்களை முற்றும் ஒப்படைப்பதையே, "ஆத்ம ஸமர்ப்பணம்" என்று ஆன்றோர்கள் கூறுகிறார்கள்.

[அடுத்த இதழில் முடியும்.]

……தகப்பனார் விசுவாமித்திரர் மாதிரியாக எங்கள் முன் தோன்றி, "ஏய், பிச்சைக்காரி! இங்கு ஏன் வந்தே? போ வெளியே" என்று என் தாயார் மேலிருந்த கோபத்தையெல்லாம் அந்தக் குற்றமற்ற பெண்ணின் மீது செலுத்தினார். என் இளம் உள்ளம் அதைச் சகிக்கவில்லை……

# பிச்சைக்காரப் பெண்

(எஸ். சிதம்பரம்.)



ஏழை வீதியில் ஒரு பிச்சைக்காரப்பெண் வயிற்றுக் கொடுமையால் ஆவியே உருகி ஓடுவதுபோல் பாடிக்கொண்டு செல்கிறாள். ஆகவே, எனக்குத் தெரிந்த ஒரு பிச்சைக்காரப் பெண்ணின் வாழ்க்கையை உங்களுக்குச் சொல்லுகிறேன்.

அப்பொழுதெல்லாம் நான் சிறு பையன். எனக்குப் பத்து வயது இருக்கும். ஒருநாள் என் தாயாரிடம் ஆடிப்பாடி ஒரு காலணா பெற்றுக்கொண்டேன். ஆனந்தத்தால் துள்ளிக் குதித்துக்கொண்டே ஏதாவது வாங்கித் தின்பதற்காகக் கடைத்தெருவிற்கு ஓடினேன். ஒன்றும் மனதிற்கு இசைந்ததாக இல்லை. ஆனாலும் ஏதாவது வாங்கித் தின்னவேண்டும் போலிருந்தது. அந்தச் சமயத்தில் ஒரு பலாப்பழக்கடை என் கண்ணில் பட்டது. எனக்குப் பலாப்பழம் என்றாலே மிக மிகப் பிரியம். ஆகவே காலணாக் கொடுத்து ஒரு சுளை வாங்கிவிட்டு, என் தங்கையை ஏமாற்றிய பிறகுதான் தின்ன வேண்டுமென்ற எண்ணத்தால் வாயில் உமிழ்நீர் ஊறியபடியே அதைப் பார்த்துக்கொண்டே சந்துகளின் வழியாக சென்று கொண்டிருந்தேன்.

அப்பொழுது மூன்றுமணியிருக்கலாம். அப்படியிருந்தும் சூர்யபகவானுடைய மனம் இன்னும் இளகவில்லை. நான் நடக்கும்பொழுதே பக்கத்திலுள்ளதையெல்லாம் வேடிக்கை பார்த்துக்கொண்டே நடந்தேன. ஒரு சிறு வீட்டின் முன்னால் ஒரு குருட்டுப் பிச்சைக்காரனும் அவனுக்கும் சேர்த்துக் கண்களையுடையவள்போல் விழித்த ஒரு சிறு பெண்ணும், "அம்மா, சோறு போடுங்க தாயே" என்று தொண்டை வறண்டு போகும்படியாக கத்திக்கொண்டு நின்றனர். உள்ளேயிருந்து சோறும் வரவில்லை; பதிலும் வரவில்லை. அவர்களைப் பார்க்க ஒரு விதமான உணர்ச்சி ஏற்பட்டதால் அப்படியே நின்று அவர்களைக் கவனித்தேன்.

அந்தப் பிச்சைக்காரன் குருடன். கால்கள் வரை கந்தை கந்தையாய் தொங்குகின்ற ஒரு துணி. அதுதான் அவனது முழுப் பொக்கிஷம். தலைமயிரோ பிசுக்குப் பிடித்து கட்டி கட்டியாய்த் தொங்கி எவ்வளவோ நாளாகிறது. முகத்திலே சுருங்கல்களுக்குக் கணக்கில்லை. பிச்சை யெடுத்து வாழ்ந்தாலும் திடகாத்திரமான உடம்பு; ஆனால் அதுவும் வயதினுடைய வேலையால் கூனலடைகின்றது. ஆனால் அவனுக்கு அப்படிக் கத்தக்கூடிய

தொண்டை எப்படி வந்தது?—அதுதான் ஆச்சரியம். ஆம், ஒவ்வொரு அம்மணியின் வீட்டின் முன்னும் ஒரு கால்மணி நேரம் குரலைக் கொடுத்தால் தானே பத்து வீட்டிற்கு ஒரு வீட்டிலாவது ஒரு பிடி அரிசி கிடைக்கும். "தாத்தா! தாத்தா!" என்று கூப்பிட்டுக்கொண்டு அவனைச் சுற்றிவரும் அந்தப் பெண்ணைப் பாருங்கள்! முழங்காலுக்குக் கீழே இரண்டு அங்குலம் தொங்குகின்ற பாவாடை—அதில் நாலைந்து கிழிசல். மேலே போட்டிருக்கின்ற சட்டையோ ஒட்டு நிரம்பி பல வர்ணங்களாய்க் காட்சி யளிக்கும். அவளுடைய தலைமயிர் எண்ணெயின் வாடைபட்டு வருஷக் கணக்காகிறது. காற்றில் எழும்பிக் குதிக்கும். அவளது மயிரில் தூசு துணுக்குகள் படிந்து கிடக்கும் குறு குறுவென்ற கண்கள், இளமையின் வனப்பால் தளிர்த்த முகம்-யாருடைய இருதயத்தையும் இழுக்கக் கூடியது. அவள்தான் அந்தக் கம்பை பிடித்து வழி காட்டிக்கொண்டே செல்வாள். அந்தக் கம்போ நடுவில் வளைந்து மிகவும் பழைமையான ரூபத்துடன் அவர்களுடைய பரம்பரைப் பெருமையை விளக்கா நின்றது.

அவளுடைய கூர்மையான கண்கள் திடீரென என் கையிலிருந்த பலாச்சுளையின் மீது விழுந்தது. உடனே அதைத் தின்ன வேண்டுமென்ற ஆவல் உதித்தது. சிறு குழந்தை தானே!

"தாத்தா, தாத்தா! எனக்கு அது வாங்கித் தா" என்றாள்.

அவனுக்கோ கண் தெரியாது "எதம்மா?" என்று கேட்டான் கிழவன் அன்பு கனிய.

சிறுமிக்கோ அதனுடைய பெயர் தெரியவில்லை; விம்மி விம்மி அழ ஆரம்பித்தாள்.

எனக்கோ மனம் சகிக்கவில்லை. பலாச்சுளையை சிறுமியிடம் நீட்டினேன்.

அவள் மலர்ந்த முகத்தோடு ஓடிவந்து அதை வாங்கிக் கொண்டாள். அவளுடைய வதனத்தில் தான் என்ன ஆவல் அதைத் தின்னும்போது என்ன உற்சாகம்! என்ன ஆனந்தம்!!!

நான் மனத்திருப்தியுடன் வீடு போய்ச் சேர்ந்தேன்.

சில நாட்கள் கழிந்தன. நான் என் சிநேகிதர்களுடன் கூடி ஆட்டம் போட்டுக் கொண்டிருந்தேன். அவர்கள் தகரப் போணியில் அடித்துக்கொண்டே, "அம்மா, சோறு போடுங்க, தாயே" என்று கூறும் சப்தம் கேட்டது. விரைவாக எழுந்து ஒரு கை நிறைய அரிசி எடுத்து வந்து கொடுத்தேன். சிறுமி என்னைப் பார்த்ததும் நன்றி யறிதலுடன் கூடிய ஒரு புன்னகை செய்தாள்.

"நீங்க தினம் பிச்சை யெடுக்கணுமா? உங்க அப்பா உங்களுக்குச் சம்பாதிச்சுட்டு வரமாட்டாரா?" என்று கேட்டேன்.

அவளுடைய கண்களில் நீர் ததும்பிற்று. "இவர்தான் எங்க தாத்தா. எங்க அப்பா, அம்மா எல்லாம் செத்துப்பூட்டா."

அன்று தீபாவளி. நான் பட்டாசு சுடும் வேகத்தில் இருந்தேன். அந்தச் சமயம் அவள் அழுதுகொண்டே தனியாக வந்தாள். அழுது அழுது அவளது கண்கள் சிவந்து போயிருந்தன.

"ஏனம்மா அழுகிறே?" என்றேன் நான். "உங்க தாத்தாவை எங்கே?"

"எங்கள்......தாத்தாவை......தாத்தாவை......யாரோ சினிமாக்காரியாம்......ஹூம்......ஹூம்......அவா காரை.........காரை மேலே......ஏத்திட்டா......எங்க தாத்தா......என்னையே......வுட்டுட்டுப் போயிட்டாரு....

மறுபடியும் சிறுமி பலமாக அழ ஆரம்பித்தாள்.

"எங்க வீட்டுக்கு வாரியாம்மா, பலகார, பக்ஷண மெல்லாம் தாரேன்" என்றேன்.

அவள் அழுதுகொண்டே வீட்டிற்கு வந்தாள்.

"வாம்மா. உள்ளே வா" என்று கூறி உள்ளே கூட்டிச் சென்றேன். அவள் ஒவ்வொரு மூன்று அடிக்கும் நின்று பயம் பொருந்திய ஒரு பார்வையுடன் அக்கம் பக்கம் பார்த்துக்கொண்டேயிருந்தாள்.

"யாரும் ஒன்றும் சொல்லமாட்டார்களம்மா" என்று அந்த இளம் இருதயத்தை உற்சாகப் படுத்தினேன்.

நான் சொன்னதற்கு மறுப்புப் போன்று என் தகப்பனாரின் சப்தம் இரைந்தது. அவரும் என் தாயாரும் ஏதாவது யுத்தம் செய்து கொண்டிருந்தார்கள் போலிருக்கின்றது. தகப்பனார் கோபமாக வந்தவர் விசுவாமித்திரர் மாதிரியாக எங்கள் முன் தோன்றினார். "ஏய். பிச்சைக்காரி! இங்க ஏன் வந்தே? போ வெளியே" என்று என் தாயார் மேலிருந்த கோபத்தையெல்லாம் அந்தக் குற்றமற்ற பெண்ணின் மீது செலுத்தினார்.

என் இளம் உள்ளம் அதைச் சகிக்கவில்லை. "நான் தானப்பா அவளைக் கூட்டிக்கொண்டு வந்தேன்" என்றேன்.

உடனே என் முதுகில் அவரது கோபமும் பலமும் வெளியேறின. "ஊரிலே திரியிற பெண்களை யெல்லாமாடா அழைச்சிண்டு வாரது" என்று கூறிவிட்டு அச்சிறு பெண்ணை அதட்டி வெளியே துரத்தி விட்டார்.

அந்தச் சிறுமியோ என்னைக் கடைசிமுறையாக ஒரு பார்வை பார்த்துவிட்டு அவளது கன்னங்களில் கண்ணீரானது புளபுள வென்று உதிர்ந்து கொண்டிருக்க தலைகுனிந்த வண்ணம், 'தாத்தா, தாத்தா. நீ என்னை விட்டுட்டு ஏன் போனே? என்னையும் உன் கூட அழைச்சிண்டு போயேன்" என்று முணுமுணுத்துவிட்டுச் சென்ற காட்சி இன்னும் என் கண்முன்னால் நிற்கிறது.

எத்தனையோ வருடங்கள் கடந்து சென்றன. ஒருநாள் எனக்கு மதராஸிலிருந்து ஒரு கடிதமும் ஒரு சிறிய பார்ஸலும் வந்தது. முதலில் கடிதத்தை உடைத்துப் பார்த்தேன்.

பிரியமானவருக்கு சரஸ்வதி எழுதிக்கொண்டது.

உங்களுடைய பிச்சைக்காரப் பெண் நானென்பது உங்களுக்கு ஞாபக மிருக்கலாம். என்னை உங்கள் தந்தை அடித்து விரட்டியபின்பு நான் பாட்டையின் வழியே அழுதுகொண்டே சென்றேன். அப்பொழுது ஒரு கிழவர் என் முன்னுக வந்தார். அவரைப் பார்த்தால் என் தாத்தாவே உயிர்பெற்று வந்ததுபோல் தோன்றியது. அவருக்கும் பிள்ளை யில்லையாம். ஆகவே, அவர் என்னைத் தம் வீட்டிற்கு அழைத்துப்போய் மிகவும் செல்வமாக வளர்த்தார். அவருடைய வயதான மனைவி என்னிடம் வைத்திருந்த அன்பு சாதாரண மானதல்ல. நான் எட்டாவது பாரம் வரை ஒரு ஹைஸ்கூலில் படித்துத் தேறி யிருக்கின்றேன்.

இவ்வளவு நாட்களுக்குப் பிறகு உங்களுடைய அன்பான-கஷ்டத்தைக் கண்டால் சகியாத—இருதயம் என் மனதை விட்டு அகலவே யில்லை. இந்த ஜீவன் உள்ளவரை உங்கள் நன்றியை மறக்க மாட்டேன்.

இப்படிக்கு,
நன்றியறிதலுள்ள,
ஸரஸு."

பின்பு அவ்வளவு சிறிய பார்ஸலுக்குள் என்னதான் இருக்குமென்று ஆச்சரியத்துடனும், குழம்பிய மனத்துடனும் அதை உடைத்தேன்.

அங்கே என்ன இருந்தது என்று எண்ணுகிறீர்கள்! அது ஒரு பலாச்சுளை.

நாட்கள் மறைந்தன. ஒருநாள் சாயந்திரம் வழக்கப்படி ஸ்டேஷன் பக்கமாக உலாவச் சென்றேன். என்றுமில்லாதபடி அங்கே ஜனத்திரள் இருந்தது. நாகரீக யுவர்கள் மலர்மாலைகளுடன் மொய்த்திருந்தனர். என்ன விசேஷம் என்று விசாரித்தேன்.

"இது தெரியாதா? இது ஒரு பெரிய கர்நாடகம்போ லிருக்குடா! சினிமா ராணி ஸரஸாம்பாள் வருகிருள். எத்தனை படங்களில் தோன்றி பார்ப்பவரின் உள்ளத்தைக் கொள்ளை கொண்டிருக்கிருள் தெரியுமா?"

"ஆஹா! என்ன நடிப்பு! எத்தனை கதாநாயகர்கள் இவளிடம் விளக்குமாற்றுப் பூசை வாங்கி யிருக்கிருர்கள், தெரியுமா?" என்றுர் மற்ருெருவர்.

"நேராக நம்ம வீட்டிற்குத்தான் வந்து இறங்குகிருள், ப்ரதர்' என்றுர் ஒரு மைனர்.

இந்த வேடிக்கையுந் தான் பார்ப்போமே என்று அங்கே நின்றேன்.

வண்டி 'ஜிகு ஜிகு'வென்று பிளாட்பாரத்திற்குள் நுழைந்தது. ஒரு அழகிய யுவதி கையில் ஒரு 'பேக்'குடன் இறங்கி ஒரு புன்னகை புரிந்தாள். முகமும் புன்னகையும் எனக்குப் பழகியது போலிருந்தது. ஆனால், என்னவென்று கண்டுகொள்ள முடியவில்லை. காமிராக்கள் 'கிளிக் கிளிக்'கென்று சப்தம் செய்தன. ஜனக்கூட்டம் நெருக்கித் தள்ளியது.

சினிமா ராணியோ கையை வீசிக்கொண்டு காரில் ஏறினள். கார் புறப்பட்டது; மாலை கொண்டு வந்தவர்களுடைய முகத்திலெல்லாம் ஏமாற்றக் குறி தென்பட்டது.

அந்த முகமும் புன்னகையும் யாருடையது என்று யோசித்துக் கொண்டிருந்தேன். திடீரென அந்த எண்ணம் மின்னல் போல் தோன்றியது. "ஸரஸு! ஸரஸு!" என்று பைத்தியம் பிடித்தவன்போல் ஓடுகின்ற காரின் பின்னே கத்திக்கொண்டே ஓடினேன்.

ஏகச் சப்தத்துடனும் குழப்பத்துடனும் கார் நின்றது. என்னவென்று விசாரித்தேன். "ஒரு குருட்டுப் பிச்சைக்காரனும் அவனுடன் ஒரு சிறு பெண்ணும் வந்தார்கள். கார் பிச்சைக்காரன் மேல் ஏறி அவன் இறந்து விட்டானாம். குழந்தை அழுகிறது" என்று பதில் கிடைத்தது.

என் மூளை கலங்குவதுபோல் தோன்றியது.

மறுநாள் வீதியிலே பத்திரிகை விற்கும் சிறுவன்: "சினிமா ராணி ஸாஸாம்பாளுக்குப் பைத்தியம்! சினிமா ராணி ஸரஸாம்பாளுக்குப் பைத்தியம்!" என்று இரைந்துகொண்டு சென்றது என் காதில் விழுந்தது.

# சிலப்பதிகாரமும் சிலம்பும்

(வித்வான்—S. P. கெம்பீர நைனர்)



ஆசிரியர் இளங்கோ வடிகள் குன்றக் குறவர் வாயிலாகவும் மதுரைக் கூலவாணிகன் சீத்தலை சாத்தனுர் வாயிலாகவும் தாம் கேட்டனவும் அவையன்றி அறிந்தனவும் ஆய கோவலன் கண்ணகி களின் வரலாற்றைக் கூறும் நூல் சிலப்பதிகாரம் என்னும் பெய ரைத் தாங்கிற்று. அது அப் பெயரைத் தாங்குதற்குக் காரணம் கூட ஆசிரியரால் விளக்கப் பட்டுள்ளது.

"சூழ்வினைச் சிலம்பு காரணமாக"

(1) "அரசியல் பிழைத்தோர்க்கு அறங் கூற்றாவதூஉம்.

(2) உரைசால் பத்தினிக்கு உயர்ந்தோர் ஏத்தலும்.

(3) ஊழ்வினை உருத்து வந்தூட்டு மென்பதூஉம்" ஆய

மூன்று காரியங்கள் நடைபெற்றன. இம் மூன்று காரியங்களும் சூழ்வினைச் சிலம்பு காரணமாக (நடைபெற்றமையின் காரண காரிய முறைப்படி அதாவது காரணத்தை ஒட்டி) "சிலப்பதிகாரம் என்னும் பெயரால் நாட்டுதும் யாமோர் பாட்டுடைச் செய்யுள்" என்கிறார். அதாவது இது காரணமாக இக்காரியங்கள் மூன்றை யும் கூறுகின்றேன் என்பது.

ஆகவே, சிலப்பதிகாரத்தில் ஆசிரியர் பாண்டியன் வரலாற் றைக் கூற வந்தது அரசியல் பிழைத்தோர்க்கு அறங் கூற்றாதலை விளக்குதற்கு மட்டுமேயாம். பாண்டியனது ஊழ்வினையை நோக் குதற்கு அன்று. கண்ணகியின் கதையைக் கூறியதும் உரைசால் பத்தினிக்கு உயர்ந்தோர் ஏத்தல் ஒன்றையே காட்டுதற்காகும். அடுத்தபடி கோவலனையோவெனின் ஊழ்வினை உருத்துவந்து ஊட் டும் என்பதற்கே யாகும். இவர் மூவரும் தான் சிலப்பதிகாரத் திற்கு முக்கிய பாத்திரங்கள் ஆவர். ஏனையோ ரெல்லாம் இடைப் பிறவரல்களேயாம். ஆகவே, அவர்களைப்பற்றிய ஊழ்வினை அல் லது மற்றைய இரண்டு இவற்றைக் கூறவேண்டிய அவசியமில்லை.

இனி "மாதவி மடந்தைக் கானற் பாணி கனக விஜயர் முடித் தலை நெறித்தது" ஆயினும், அவள் வரலாற்றில் அவள் தன் ஊழ் வினையைப் பற்றிப் பேசவேண்டிய அவசியமில்லை என்க. வேண்டு மெனின், "சூழ்வினைச் சிலம்பு காரணமாக" என்பதில் சிலப்பதிகா ரப் பாத்திரங்கள் எல்லாருடைய ஊழ்வினையையும் சூழ்வதற்கு (ஆராய்வதற்கு)க் காரணமாய் சிலம்பு என்று பொருள் கூறி எல் லாருக்கும் ஆராய்ந்து பார்த்தால் அவர்தம் ஊழ்வினைப் புலப் படும். ஆயின், அதை ஆராய்தல் தாய்க்குத் தாய்க்குத் தாய்க்குத் தாய்க்குத் தாய்ப் பெயரென்ன என்பதை ஆராய்தல் ஒக்கும். ஆகவே, 'அவர்தம் ஊழ்வினையைக் கூறாது விடுகின்றோம் என்னும் இளங்கோவின் வாக்கு இனிது விளங்கும்.

அப்படி இருந்தும் அவசியம் நேர்ந்தபோது நேர்ந்தார்க்கு மட்டும் ஊழ்வினையும் மற்றைய இரண்டும் விதிமுகத்தானும் மறைமுகத்தானும் கூறப்பட்டுள்ளது என அறியலாம்.

அடுத்தபடி மீதுரைமா நகர் எரியால் உண்ணப்பட்டது, "ஒள்ளெரியுண்ண உரையுமுண்டு" என்ற ஜோதிட வார்த்தையுமன்று, அரசன் வார்த்திகனைச் சிறைப் படுத்தியும் கோவலனைக் கொன்றும் முறை பிறழ்ந்ததற்கும் அன்று. அப்படியாயின், வினை ஒருவன் செய்ய அதன் பயனை வேறொருவன் அடைந்த தன்மையாகும். அதனால், மதுரையின்கண் தீத்திறத்தார் பல்லார் இருந்தனர். அவர்களையே தீச் சேர்ந்தது. பசு, பத்தினிப் பெண்டிர் முதலிய நகரத்து நல்லாரும் நகரமும் நலம்பெறவே திகழ்ந்தனர் என்பது "தீத்திறத்தார் பக்கமே தீச்சேர்க" என்ற அடியால் விளங்கும்.

இது இப்படி இருக்க, பனை என்பது மரந்தான், ஆனால் மரமெல்லாம் பனையாக மாட்டா என்ற தத்துவத்தை நன்குணர்ந்த என் ஆழ்ந்த பெருமதிப்புக்குரியாரும் என் தலை நண்பரும் ஆகிய வித்வான் வே. சு. சுப்பிரமணிய ஆசாரியார் P. O. L. அவர்கள் ஊழ்வினை உருத்து வந்தூட்டும் என்பது சிலப்பதிகாரம் தான், ஆனால் சிலப்பதிகாரமெல்லாம் ஊழ்வினை ஆகாது என்பதை அறியாதது ஏனோ? அறியேன். அது பாம்பைக் கயிறென்று கொண்டது போலாகும்.

தவிர, மனித உருவத்தை தலை, உடல், கால் என மூன்றாகப் பிரித்து, அவற்றினுள் தலையை ஆராயப்புகும் ஒருவன் மனிதனது காலாகிய ஒரு உறுப்பை தலையாகிய அவன் மற்றொரு உறுப்பில் தேடிவிட்டு அது அங்கு கிடைக்கப் பெறாமையால் மனித உடலைப் படைத்தவன்பேரில் குற்றம் காட்டுவானோ? அப்படியே திரு ஆசாரியார் அவர்களும் "அரசியல் பிழைத்தோர்க்கு அறங் கூற்றாதலைக் காட்டும் பாண்டியனாகிய ஓர் உறுப்பில் கோவலன் உறுப்பாகிய ஊழ்வினையில் தேடப் புகுந்தது ஏனோ? வேண்டுமாயின் சூழ்வினைச் சிலம்பு காரணமாக ஆராய்க என முன்னமே கூறப்பட்டது. இப்படிப் பொருத்திப் பார்ப்பதால் சிலம்பு அதிகரித்து வருகின்ற சிலப்பதிகாரத்திற்கு சிலம்புதான் காரணம் என்பது புலப்படும். ஆகவே, "சிலப்பதிகாரமும் சிலம்பும்" என்று கொண்டு ஆராயப்புகின் அவ்வாராய்ச்சிக்கு ஆபத்து ஒன்றுமிராது. அதை விடுத்துச் சிலப்பதிகாரத்திற்கு ஊழ்வினையை சம்பந்தப் படுத்தி, "சிலப்பதிகாரமும் ஊழ்வினையும்" என்று பார்த்ததே இவ்வளவு இடர்ப்பாட்டிற்கும் காரணம் என்பதை மிக்கத் தாழ்மையுடன்— என் நண்பர் அவர்களுக்குத் தெரிவித்துக் கொள்ளுகின்றேன்.

மேற்கூறிய இக்காரணங்களால் இளங்கோவடிகள் எவ்விதத்திலும் இடரினரல்லர் என்று உட்கொண்டு யாவரும் அவர் கருத்தை நன்குணர்ந்து வாசித்து மகிழ்வாராக என ஆதிபகவனின் அடியினை இறைஞ்சுகின்றேன்.

ஆரம்ப நாள் வைபவத்தை 

 ஆவலுடன் எதிர்பாருங்கள்!

காதுக்கினிய கானங்கள், கண்ணுக்கினிய காட்சிகள்,
மனதுக் கினிய ஹாஸ்ய காட்சிகள் நிறைந்த

லியோ பிலிம்ஸாரின்

# பூம்பாவை

தமிழ்ப் படம்

டைரக்டர்: **T. பாலாஜி சிங்** ஸ்டுடியோ: **நியூடோன்**

நடிக ரத்தினங்கள்:

| | |
|---|---|
| **K. R.** ராமசாமி | **U. R.** ஜீவரத்தினம் |
| K. சாரங்கபாணி | K. R. செல்லம் |
| T. R. ராமச்சந்திரன் | A. R. சகுந்தலா |

**N. S.** கிருஷ்ணன் & **T. A.** மதுரம்

டான்ஸ்: **நடராஜ் அண்டு பார்ட்டி**

இன்னும் மற்ற தென்னாட்டு புகழ் வாய்ந்த நடிகர்கள் நடிக்கின்றனர்

| பாட்டு | பின்னணி சங்கீதம்: | வசனம் |
|---|---|---|
| மாரியப்ப சுவாமிகள் | அத்தேதல்லி A. ராமராவ் | A.A. சோமயாஜுலு B.A. |

**விரைவில் உங்களூர் திரைக்கு வரும்**
**நாளே எதிர்பாருங்கள்!**

---

விநியோகஸ்தர்கள்:—

## கந்தன் & கம்பெனியார்,

கோயமுத்தூர், மதுரை, கோட்டயம்.

மைசூர் சமஸ்தானம்:— பெங்களூர் கண்டோன்மெண்ட் உள்பட வட், தென், கன்னடம் ஆகியவற்றிற்கு

**மைசூர் பிலிம் கார்ப்பரேஷன்,**

(96, காந்தி நகர், பெங்களூர்.)

அன்னியரிடம் மீளா அடிமை கொண்ட தமிழனுக்கு—
தன்னைத் தமிழன் என்று கூறுவதற்குக் கூட வெட்கப்படும் தமிழனுக்கு இக் கட்டுரை தன்மதிப் புணர்ச்சி யூட்டும்.

# தலை நிமிர் தமிழா.

(“ஓம்”)



## நான் யார்?

நான் யார்? “நான் மனிதன்”. இதுதான் தற்காலத் தமிழன் ஒவ்வொருவனின் வாயினின்று வரும் விடை!

இவ் விடையை உன் ஒதிரியும் மனத்திடம் கேட்டுத் தெளி! நான் “தமிழன்” என நாணத்துடன் நவிலும். அந்தோ! “தமிழன்” என்று கூறுவதற்குக் கூட எவ்வளவு வெட்கம்! எத்துணை வெட்கம்......! என்பது கோடிக்கு மேலும் எண்ணி மகிழும் உனது நெஞ்சத்திற்குத் “தமிழன்” இதைக்கூட நினைக்க நேரமில்லையா?

இத்தனைக்கும் காரணம்......! அன்னியரிடம் நீ கொண்ட மீளா அடிமை! நீ மட்டுமல்ல......! உன் மொழி! உன் நாடு! இவைகளுந் தான்—! உன் வீர மெங்கே ஒளித்தது? தலை நிமிர் தமிழா!

## மொழி!

பண்டையது...! சிறந்தது...! கட்வுட்டன்மை உடையது என நீ கூறிக் கொள்ளும் “தமிழ்” இப்பொழுது எப்படி இருக்கிறது? எத்துணை முறை—எத்துணை வகையில் சித்திர வதை செய்யப்படுகிறது? எவ்வளவு தூசு மண்டி இருக்கிறது? துடைத்து மெருகிடு! இதுதான் உனது முதற் பணி! தலை நிமிர் தமிழா!

## நாடு

நீ வசிக்கும் நாடு எது? “தமிழ் நாடு” இப்படிச் சொல்லும் போதே உன் நாட்டின் பெருமை நன்கு விளங்கவில்லையா? இது மிகத் தொன்மையது! பல் வளங்களும் பல்கி யுள்ளது! எங்கு பார்த்தாலும் பச்சை மலைகள் பரந் தொளிரும் மருத நிலம்! எவ்வயினும் அமைதியை ஊட்டி அழ கொளிரும் குறிஞ்சி நிலம்!

எத்திசை நோக்கினும் ஆநிரையும் மாநிரையும் மேயும் முல்லை நிலம்! எங்கணும் திரை மோதும் நெய்தல் நிலம்......! எங்கும் மனமிரங்கும் பாலை! இங்ஙனம் சிறந்த ஐவகை நிலங்கள் இந்த அவனியில் எங்கேனும் உண்டோ?

இத்தகைய தமிழ் நாட்டை அடிமையாக்கி விட்டாயே! இது தான் உனக்கு அழகோ! புறப் பொருள் நூல்களிலே கண்ட உன் பொன்றாத வீரமெங்கே? கற் சிலைகளிலே......! கல் வெட்டு களிலே......! கண்ட கலங்காத உள்ளம் எங்கே? எல்லாம் மண் ணோடு மண்ணாய் மடிந்துவிட்டனவே! "ஓட மருந்துண்டு உறங்கி விழுந்"தாயே! தலை நிமிர் தமிழா!

**தமிழா!**

உன்னையே நீ எண்ணிப் பார்? இப்பொழு துள்ள நிலை மையை—நெருக்கடியைக் கவனி! பெயரளவில் உன்னுடு! தமிழ நாடு—பொன்னு! மொழியோ.........அமிழ்தினு மினிய தமிழ் மொழி!—ஆனல் பெருகிடுவதோ! அந்நிய மொழி! அந்நிய நாகரிகம்! இவைகளைக் காண உன் கண்கள் கூசவில்லையா! நாதில்............!

தறுகண் வீரன் "தனிசு" பொருன் என்று புகழப்பட்ட உன் மீது......இச்சமயம் போர்த்தி இருக்கும் "கடன்" போர்வைகள் எத்துணை? இச் சுமைகளை எவ்வளவு நாட்கள் சுமந்து கொண் டிருப்பாய்?

பகைவர்கள் போரிலே புறமிடித் தோட அவர்களைப் புறங் கண்ட உனக்கா இக்கதி? அன்னிய ஆட்சியைக் குழி தோண் டிப் புதைத்த நீ இப்பொழுது உனக்கே குழி தோண்டிக் கொள்ளுகின்றாயே!

போனது போகட்டும்! இனியாவது அடிமைத் தளையை அறுத்தெறிய ஆசை கொள்! மொழி—நாடு—மக்கள் மூன்றை யும் மீட்டுப் பெருமை பெறு!

"நாமார்க்குங் குடியல்லோம்—நமனை யஞ்சோம்!" என வெற்றி முரசு கொட்டி வீறிட்டெழு! இதோ "**ஆனந்தன்**" புத்தம் புதிய முறையில்—! புன்னகை நடமாட—! பொன்போல் மிளிர் ந்து புறப்பட்டு விட்டான்! உன் அஞ்ஞானம் ஒழிந்தது! எழுந்து நில்! நிமிர்ந்து பார்! வெற்றி உனதே!

**தலை நிமிர் தமிழா!**

---

……உடனே கனகசபாபதியின் காற்சிலம்பொலியும் கேட்டது. பொட்டணங்கள் மூடவன் கரத்தே வந்து விழுந்தன. அந்தப் பொற்கரம் மறைந்தது. அதைச் சூழ நின்ற ஜோதிப்பிழம்பும் கரந்தது. மூடவன் உணர் விழந்தான்.

# மூடவன் முழக்கு

(கார்த்திகேயன்)



வைத்தீஸ்வரன் கோவில் சந்நிதானத்தின் முன்னே திறந்த வெளியில் ஒரு தள்ளுவண்டி கிடக்கின்றது. இரு கால்களும் முடமான ஒரு மனித உடல் முடங்கிக் கொண்டிருக்கிறது அந்த வண்டியில். காலற்ற அந்த அகதிக்கு மூன்று கால்களுள்ள அந்தச் சின்ன வண்டியே சொந்தம் போலும்!

அதே தள்ளு வண்டியில் அந்த ஏழை மூன்று தினங்களாக அசைவற்றுக் கிடந்தான்: மூச்சு இருப்பதற்கு அடையாளமாக அவனது விலா எலும்புகள் மேலும் கீழுமாக அசைந்து கொண்டிருந்தன. வாயில் ஈ புகுவதுகூட உணராதவாறு பிரஞ்ஞையற்றுக் கிடந்தான். அவன் மீது வெயில் காய்ந்தது; காற்று வீசிப் புழுதியும் படிந்தது. அவன் உடல் அசையவில்லை.

ஆலயத்தினுள் நுழையும் சிவநேசச் செல்வர்களிற் சிலர் நிமிர்ந்த தலையுடனும், நேர் நோக்குடனும் சென்றனர்; வேறு சிலர் அந்த எளியனைக் கண்டும் காணாதவர்போல் நடந்து கொண்டனர். மற்றும் சிலர், "எந்த க்ஷேத்திரத்திற்குச் சென்றாலும் இந்தத் தொல்லைதான்" என்று முகம் சுளித்தனர். இன்னும் சிலர் "ஐயோ பாவம்!" என்று அங்கலாய்த்தனர். ஆனாலும் ஒருவராவது அவனருகிற் சென்று அவன் குறை விசாரித் தறிந்திலர்.

மூன்றாம் நாள் இரவு, ஊரடங்கும் நேரம். திடீரென வானத்தே மேகங்கள் கவிந்தன. புயல்போல காற்று சீறியெழுந்தது. மின்னல் இருளை வெட்டி மறைந்தது. குமுறிய மேகம் மழை கொட்டவுந் தொடங்கியது. வீதி நெடுக மழைத்தாரை அருவிபோல பெருக்கெடுத் தோடியது.

மழைத்தாரையில் வண்டி புழுதி நீங்கிச் சுத்தமாயிற்று. அந்த ஏழையும் குளித்து மூழ்கிப் புனிதமானான். இடையிலிருந்த அந்த ஒரே உடையும் நனைந்து துப்புரவாயிற்று. இவ்வளவும் அவன் அறியான். ஊணற்று உணர்ச்சியற்றுக் கிடந்த அவன் எவ்வாறு அறிந்துகொள்ள முடியும்?

தூற்றல் நின்றது. திடீரெனப் பிரபஞ்சங்களை யெல்லாம் வெள்ளியாக்கி விட்டதுபோல ஒரு பிரகாசமான மின்னல் எழுந்தது. அடுத்த சில விநாடிகளில் அண்டம் பொடி படுவதுபோல

ஒரு பேரிடி அதிர்ந்தது. அந்தத் தள்ளுவண்டி யருகே இரு திவ்ய புருஷர்கள் தோன்றினர். அவ்விருவரும் தேவர்கள் என்பதைக் காட்ட அவர்களைச் சுற்றி ஒரு பேரொளி வட்டம் சுழன்றது.

அவ்விரு தேவர்களும் அந்த மூடவனைக் கருணை ததும்ப நோக்கினர்.

"நம் சந்நிதானத்திலேயே இவன் உயிரை விட்டுவிடுவான் போலிருக்கிறதே!"

"அப்படி விட்டால் அது உம் பெயருக்குப் பழி சூட்டுவதாகும். வைத்திய நாதரா யிருந்தும் அவனது மூடத்தை நீர் நீக்காவிடில் என்ன பயன்?"

"அதைப்பற்றி இன்று கனகசபையில் பிரஸ்தாபித்தபோது, சபாநாதர் அவன்பால் அருள்பாலிக்கத் திருவுளங் கொண்டுள்ளார்."

"அப்படியானால் இவனை உடனே அனுப்பிவையும். உடல் மெலிந்து கிடக்கும் இவன் எப்படிச் சிதம்பரம் செல்வான்?"

"இதோ இவனை எழுப்பி உணவளிப்போம்......அன்பா! இந்தப் பிரசாதத்தை உண்டு சிதம்பரம் செல்வாயாக! சிற்றம்பலத்தில் உன் குறை நீங்கும். வழியில் வரும் இடையூறுகளைக் கண்டு கலங்காதே! தயங்காமல் உன் வண்டியுடன் புறப்படு!"

அவ்விரு புண்ணிய புருஷர்களும் அந்தர்த்தியானமாயினர்.

மூடவன் கனவு கண்டவன்போல் விழித்துக்கொண்டு நாலு திசையும் நோக்கினன். தன் பக்கத்தே ஒரு முடிச்சு இருக்கக் கண்டு அதை அவிழ்த்துப் பார்த்தான். தெய்வீக மணமும், சுவையும் கொண்ட அந்த தேவப் பிரசாதத்தைக் கண்டு அதிசயித்து இறைவனருளை வியந்தவாறு உண்டான்.

அப்பால் சோர்ந்த அவன் உடம்பில் ஒரு புதுசக்தி புகுந்தது போல் விருந்தது. மனிதனளவுக்கு மேற்பட்ட ஒரு நூதன வன்மை அவனுக்கு உண்டாயிருப்பதுபோல் தோன்றிற்று.

"ஈசா! இதுவும் நின் செயல்தானோ! இந்த ஏழையின் பிரார்த்தனையையும் நிறைவேற்றத் திருவுளங் கொண்டீரோ! கருணை மூர்த்தியே! தீராத நோயை தீர்த்துவைக்கும் தீனதயாளா!" என்று துதித்துத் தன் இரு கரங்களையும் குவித்து வணங்கினன். பின்னர், "உன் ஆணைப்படி செய்வேன். பின், நீ விட்ட வழி காண்பேன்" என்று எண்ணி வண்டிச் சக்கரங்களைக் கைகளால் சுற்றினன். வண்டி ஒருமுறை சுழன்று நின்றது.

'கனகசபாபதி' என்று மீண்டும் அவன் கை வைத்தபோது வண்டி கடகடவென்று ஓடத் தொடங்கியது. சக்கரங்களை அவன் சுழற்று முன்னே அவை விரைந்து சுழன்று ஓடத்தலைப்பட்டதைக் காண அவன் கொண்ட பேரானந்தத்திற்கு ஓர் எல்லை இல்லை.

அவனுக்கு அதிக் சிரமம் இல்லாமலே வண்டி கொள்ளிடக் கரை வந்து சேர்ந்தது. கொள்ளிட நதியிலோ வெள்ளம் கரை புரண்டோடியது. அதுகண்ட அவன், "ஐயோ! இதற்கு என் செய்வேன்!" என்று ஒரு கணம் மலைத்துப் போனான். உடனே, "வழியில் வரும் இடையூறுகளைக் கண்டு கலங்காதே!" என்ற தேவ கட்டளை நினைவுக்குவர, "எம்பெருமானே! நீயே துணை!" எனச் சொல்லிச் சக்கரங்களை உருட்டினான்.

கடலில் தள்ளப்பட்ட அப்பர் சுவாமிகளுக்குக் கல் புணையா னதுபோல, கொள்ளிட நதியில் அந்தத் தள்ளுவண்டி முடவனுக் குத் தெப்பமாயிற்று. சக்கரங்கள் பிரவாகத்தைக் கிழித்துக் கொண்டோடி எதிர்க்கரை ஏறியது.

சிதம்பரத்திற்கு ஒரு காத தூரத்திற்கப்பால் அவன் சென்ற போது வண்டி மேலும் செல்லமாட்டாது நின்றது. இரவில் அகால மாகிவிட்ட படியால் அவன் உணர்வு தடுமாறியது. தன்னை மற ந்து கண்களை மூடினான்.

பின்னர், அவன் விழித்தபோது தன் வண்டியுடன் ஸ்ரீ நடரா ஜப் பெருமானது சந்நிதானத்துக் கெதிரில் இருக்கக் கண்டான். அப்போது ஆலயக் கதவுகளைத் திறந்த மெய் காப்பாளர்கள் வண்டியில் கிடந்த இந்த முடவனைக் கண்டு திகைத்துப் போயினர். அப்பால் அவன் அங்கு வந்து சேர்ந்த வரலாற்றைக் கேட்ட போது இறைவனது அருள் திறத்தை எண்ணியெண்ணி மகிழ லாயினர்.

அன்று எம்பெருமானுக்கு நடந்த ஆறுகால பூஜைகளையும் கண்டு முடவன் ஆனந்த பரவசனானான். அவனது திரிகரணங் களும் சபாநாயகனது திவ்ய ரூபத்திலேயே லயின்றி யிருந்தன.

இரவு அர்த்தசாம பூஜை ஆனபிறகு ஆலயக்கதவுகள் யாவும் திருக்காப்பிடப் பிட்டன. முடவன் மட்டும் அங்கேயே தங்கியிருக்க தீக்ஷிதர்கள் அனுமதியளித்தனர்.

மூன்றாம் யாமத் தொடக்கத்தில் கர்ப்பக்கிருக வாயிலருகே ஓர் ஒளிவட்டம் உண்டாயிற்று. அது, சிறிது சிறிதாக விரிந்து கண்ணைப் பறிக்கும் ஒரு பெருஞ் சோதி வட்டமாக மாறியது. வண்டியிற் கிடந்த முடவனுடைய ஊனக்கண்கள் அப் பேரொளிப் பிழம்பைப் பார்க்கக் கூசின.

அந்த ஜோதித் தட்டினின்றும் ஒரு திவ்ய மலர்க்கரம் நீண் டது. சுவர்ண மயமான அந்த மோகன கரத்தில் ரத்தினங்கள் பதித்த திருவாபரணங்கள் பல சுடர்விட் டொளிர்ந்தன. அம் முடவன் குஞ்சித பாதங்களின் நினைவே உள்ளத்தில் கொண்ட வாறு தன்னை மறந்து கிடந்தான்.

"அன்பனே! முன்னம் துவாபர யுகத்தில் ஒருமுறை அன் பன் ஒருவனுக்கு முடத்தை நீக்கி யருளினோம். இந்தக் கலியுகத் தில் உன் குறையை நீக்க உடன்பட்டோம். மாயூரம் சென்று காவிரியில் ஸ்நானம் செய்து எழுந்து இதோ இந்தப் பொட்டணங்

களில் ஒன்றைப் பிரித்து அதனுள்ளிருக்கும் ஔஷதத்தை நீரிற் கலந்து பருகுவாயாக. மற்ற இரு பொட்டணங்களையும் இராத நோயுற்று அவதியுறும் மக்களுக்கு அளித்துக் காப்பாயாக!" என்று திருவாக் கொன்று எழுந்தது. உடனே கனக சபாபதியின் காற்சிலம்பொலியும் கேட்டது. பொட்டணங்கள் முடவன் கரத்தே வந்து விழுந்தன. அந்தப் பெற்கரம் மறைந்தது. அதைச் சூழ நின்ற ஜோதிப்பிழம்பும் கரந்தது. முடவன் உணர் விழந்தான்.

அப்பால் அவனுக்குப் பிரஞ்ஞை வந்தபோது முன்னே வண்டி ஓடாமல் நின்ற இடத்தில் தான் வந்திருக்கக் கண்டான். அப்போது கிழக்கு வெளுத்து சூரியோதயமும் தொடங்கி விட்டதால் அவன் மெல்ல நிமிர்ந் துட்கார்ந்து இறைவனை மனதிலே தியானித்து வண்டியைத் தள்ளலானான். வண்டியும் முன்போலவே ஓடத் தொடங்கியது.

வழியில் நின்ற பெரிய ஆலமரம் ஒன்று திடீரென முறிந்து வண்டி மீது கவிழ்ந்து விட்டது. வளைந்த கிளைகளி னிடையே வண்டி அகப்பட்டுக் கொண்டது கண்டு முடவன் மனங் கலங்கினான். இறைவனைத் தியானித்து வணங்கி யிருந்தான்.

சற்று நேரத்தில் அவ்வழியே வந்த ரஸ்தா மேஸ்திரி மரம் விழுந்து கிடப்பதுகண்டு ஆட்களைக் கொணர்ந்து அதைத் துண்டாடி அப்புறப்படுத்தினான். முடவனை வண்டியுடன் மெல்லத் தூக்கி அப்பால் விடச் செய்தான்.

வந்த பேராபத்தும் இறைவன் அருளால் நீங்கப்பெற்று வண்டியைச் செலுத்த, அதுவும் விரைவில் கொள்ளிடக்கரையைக் குறுகியது. முன்போல கடவுளாணையால் அது நதியில் மிதந்து சென்று கரையேறி காழியம்பதியை யடைந்தது. பத்து நாழிகைப் போதில் மாயூரம் சென்று காவிரிக்கரையைக் குறுகியது.

கரையில் வண்டியினின்றும் இறங்கிக் கைகளால் படிகளைத் தாண்டி நீரை யடைந்தான்.

ஸ்ரீ சிதம்பரநாதனை மனதில் தியானித்தவண்ணம் வணங்கிப் பின் நீரில் மூழ்கியெழுந்து பொட்டலத்தைப் பிரித்து அத்தேவ மருந்தை நீரிற் கொட்டிப் பருகினான்.

"ஆ! என்ன விந்தை! என்ன அற்புதம்! அவன் குறை கால்கள் இரண்டும் நீண்டு வளர்ந்து அவனை நிமிர்ந்து நிற்கச் செய்தன. அவனது கரிய மேனி பொன்மேனியெனப் பொலிந்து தோன்றியது. சற்று முன் கைகளால் தவழ்ந்து சென்ற அம்முடவன் இப்போது கால்களால் நடந்து சென்ற காட்சியைக் கண்ட மக்கள் அனைவரும் அவனைச் சுற்றி கூடிவிட்டனர். "முடவனுக்கு ஜே!" என்ற கோஷம் வானைப் பிளந்தது. அவன் இதய மலரில் பொன்னம்பலவனின் ஆனந்தக் கூத்து நிகழ்ந்து கொண்டிருந்தது.

நந்தனர் தில்லைவெளிதனில் கலந்து விட்ட பின்னர், வேதியர் அடைந்த நிலையை, ஸ்ரீ கணேசன் நகைச்சுவை ததும்ப கற்பனை செய்து எழுதியிருக்கிறார். வாசித்து மகிழுங்கள்.

# நந்தனருக்குப் பின்!

(S. K. கணேசன்)



நந்தன் சிதம்பரம் சென்றதிலிருந்து வேதியர் பைத்தியம் பிடித்தவர் போலானார். அவருக்கு உணவு செல்லவில்லை; உறக்கங் கொள்ளவில்லை. நந்தனும், நந்தனது உபதேசமும் அவர் கண்முன்னே நின்றன. அந்த மகா உபதேசம் அவருடைய அஞ்ஞான இருளைக் கடிந்து அகண்டாகார சச்சிதானந்தப் பேரொளியின் தரிசனையி லாழ்த்தி விட்டது. அதையே சதா காலமும் சிந்தித்துச் சிந்தித்து, மனமது நைந்து உருகவும், கண்கள் நீரைக் கக்கவும், நித்தலும் பேரானந்தங் கொண்டு பார்க்கவும், நினைக்கவும், படிக்கவும், பக்கநின்று கேட்கவுந் தித்திக்கும் அம் மகா பெரிய சைவப் பழத்தின் தீஞ் சுவையைச் சுவைத்த வண்ண மிருந்தார்.

ஆகவே, அவருடைய லௌகிக வாழ்வு கெட்டது; மண்ணுலக பாசங்கள் மறைந்தன; ஆசைகள் கெட்டன; உயர்வு தாழ்வு வேற்றுமை யொழிந்தது; கல், மண், கழுதை, மனிதன், பறப்பன, ஊர்வன, அசேதன முதலிய வனைத்தும் அவருக்கு ஒன்றாயின. எங்கும் பிரம்மம்; எல்லாம் பிரம்மம்; எதிலும் பிரம்மம்; சர்வம் பிரம்ம மயமாயிற்று. நந்தனுடைய உபதேசத்தால் தாழ்ந்த நிலையி லிருந்த அவர் உயர்ந்த நிலைக்குக் கொண்டுவரப் பட்டார். அதற்குத் தக்க பக்குவமும் சித்தி பெற்றது.

இந்நிலை யறியாத அவர் மனைவி, தம் கணவரை மீட்டும் உலக வாழ்விற்குத் திருப்ப சதுர்வித உபாயமும் செய்து பார்த்துச் சலிப்படைந்தாள். கடைசியாக, சிதம்பரம் சென்ற நந்தனைத் திருப்பி யழைத்து வந்தால், ஒருகால் வேதியர் சுய உணர்வு பெறக் கூடுமென்று கருதி, தம் காரியஸ்தரை தில்லைக்கு அனுப்பினாள். காரியஸ்தர் சிதம்பரம் சென்று நந்தனது பிரபாவத்தையும், நந்தன் சிவபத மெய்தியதையும் தனது ஊனக் கண்களால் தரிசித்து அவரும் தெய்வப்பித்து பிடித்துத் திரும்பினார். திரும்பி வந்து வேதியரிடம் சென்று கைகூப்பிச் சொல்லலானார்.

'சுவாமி?'

மௌனம்.

'சுவாமி?'

(நிஷ்டை கலைந்து) 'யாரது?'

'தங்கள் காரியஸ்தன்.'

'உம்மைக் கூப்பிடவில்லையே.'

'இல்லை, கூப்பிடவில்லை; நானாகவே வந்தேன்.'

'அப்படியானால் இனிமேல் வரவேண்டாம். துச்சமான இந்த மண்ணுலக வாழ்வு நந்தனது உபதேசத்தால்......'

'ஆம், சலித்துப்போய் விட்டது.

'உமக்கும் அப்படியா?'

'ஆம், தில்லைக்குச் சென்ற நந்தன்......'

'நந்தன்!...நந்தன்!!...எனது அகக் கண்ணைத் திறந்து ஞான வழி காட்டிய அந்த மகா குரு நந்தன் என்னவானான்? சொல்லு.'

'எஜமான்...'

'ம்...நானல்ல இனி உமக்கு எஜமான்! எனக்கு, உமக்கு, இந்த ஜகத்துக்கு, எல்லோருக்கும் எஜமான் வேறு, அவரை எஜமான் என்று கூப்பிடும்.'

'சரி, ஐயா! நந்தனார் இவ்வூரை விட்டுக் கிளம்பிய பின்னர் பக்தி மேலீட்டால் ஆடிக் கொண்டும், பாடிக்கொண்டும், பித்தன் போலப் பகவந் நாமங்களைப் பிதற்றிக்கொண்டும் கொள்ளிடக் கரை சென்று தாண்டினார். தாண்டியதும், தில்லை நடராஜரின் கோபுர தரிசனமாயிற்று. அதைப் பார்க்க அவர் மெய் புளகாங்கித முற்றது: உரோமங்கள் சிலிர்த்தன; திறந்த இமை மூடாது கோபுர தரிசனம் செய்தபடியே ஸ்தம்பித்து நின்று விட்டார்.'

'ஆம்! (மெய்) புளகாங்கிதம், (மயிர்) சிலிர்ப்பு எல்லாம் இப்போது எனக்கும் உண்டாகின்றன. ஆனால், இதற்கு முன் எத்தனையோ கணக்கற்ற தடவைகள் அக் கோபுரங்களைப் பார்த்திருக்கிறேன். அவைகளின் மகிமையை உணராத பாபியாயிருந்து விட்டேன்....'

'வெகு நேரஞ் சென்றபின் உணர்வு பெற்றுத் தாயைத் தேடியோடும் சேய்போல நந்தனார் குடல் தெறிக்கத் தில்லையை நோக்கி ஓட்டம் பிடித்தார்.—'

'......ம்!' (நீண்ட பெருமூச்சு)

'தில்லைச் சிதம்பரத்தை நெருங்கினார். நடராஜப் பெருமான் கோயில் கொண்டுள்ள ஆலயத்தை வளைந்துள்ள வீதிகளில் வர அஞ்சி......'

'ஏன் அஞ்சினார்? அவரேதான் சிவ சொரூபமாச்சே!'

'அதை அந்த பாமர ஜனங்கள் எவ்வாறு அறிவார்கள்?'

'ஏன் அந்த ஜனங்களால் என் குரு நந்தனுக்கு ஏதும் கெடுதி நேர்ந்ததா?'

'இல்லை, அம்மாதிரி கெடுதிகளுக்கு உட்பட மனமின்றி தில்லை நகரின் ஒரு புறத்தே ஏங்கித் தேங்கி, மனச் சோர்வு கொண்டு நடராஜப் பெருமானைச் சிந்தித்தவாறு தங்கிவிட்டார்.'

'ஐயோ! என்து குரு நந்தனுக்கு இப்படியும் நேரவேண்டுமா?'

'தங்கியவர், அப்படியே சோர்ந்து படுத்துறங்கி விட்டார். இரவும் வந்து க்வ்விய து.'

'சொல்லு, மேலென்ன நடந்தது?'

'நடராஜப் பெருமான் அவர் கனவில் தோன்றி—'

'ஆ ஆ!! கனவில் வந்தாரா? இன்னுமென்ன, சீக்கிரம் சொல்லு.'

'கனவில் வந்து, 'பக்தர்! நாளை காலையில் உன்னை எனது சபைக்கு அழைத்துவர தில்லை மூவாயிரவர்களுக்குக் கட்டளை யிட் டிருக்கிறேன். வா' என்று கூறி மறைந்தார்.'

'அப்புறம்.'

'அந்தகாரம் மெல்லென நழுவி கதிரவன் குணதிசை தன் கதிர்களைப் பரப்பிக் கொண்டெழுந்தான். எங்கும் பேரிகை நாத மும், சகு கொலியும் முழங்கவாரம்பித்தன. தில்லை மூவாயிரவர்கள் நடராஜப் பெருமானின் ஆக்ஞைப்படி கனத்த விருதுகளுடனும் பேருபசாரத்துடனும் நந்தனரை அழைத்துக் கொண்டு தேரோ டும் வீதிகளைச் சுற்றித் திருக்கோவில் புக்கு, சிவ கங்கையில் விதிப்படி மூழ்கச் செய்து ஞான சபையை நண்ணினர்.'

'ஆகா, ஆகா! அந்த மகா பாக்யம்!'.........(வேதியருடைய உடல் நடுங்குகிறது.)

'நந்தனர் அவர்கள் அழைத்துச் செல்ல வாரம்பித்ததிலிரு ந்து சுயவுணர்வுடனில்லை. உள்ளும் புறமும் ஒன்ருய்ப் பூரித்து விம் மிற்று. உரோமங்கள் விரைத்து நின்றன; கண்கள் தாரை தாரை யாய் நீரைப் பெருக்கின; நடராஜப் பெருமானின் திவ்ய நாமங்கள் வாயிலிருந்து வந்து கொண்டே யிருந்தன; நடு நடுவே சொற்களை வெளியே அனுப்ப தொண்டை அடைத்தது; தொண்டை விக் கிற்று; நாக்குழறிற்று. ஆனந்தம் மேலிட்டுக் கூத்தாடினர். ஞான சபையை நெருங்க,நெருங்க அவருடைய தேஜஸ் சுடர்விட்டுப் பிர காசம் மேலிட்டது......'

'ஆம், பிரம்ம ஞானத்தின் சுவையைச் சுவைக்கும் பேறு பெற்றவர்கள்......சரி, சொல்லு, நந்தன் நடராஜப் பெருமானைக் கண் குளிரத் தரிசித்தானு? ஐயோ பாவம்! அந்தத் தரிசனத் துக்கு என்னிடம் எவ்வளவு மன்ருடினன். கேவலம், பறையன் என்று அவனைத் தவருக மதித்தேன். அவனை எடை போட என் ஞல் முடியவில்லை. ஆனுல், அவனே என்னை எடை போட்டான். என் அகக் கண்களையும் திறந்துவிட்ட பின்னரே தில்லை செல்ல விரும்பினன். எனக்கு உபதேசஞ் செய்தான். எவரும் அடைய வியலாத சாயுச்ய பதவியை அடையச் செய்தான். ஆகா! என்க் குப் பேருபகாரஞ் செய்த அந்த குரு!......பின் என்ன செய்தான்?'

'தில்லை மூவாயிரவர்கள் ஞானசபையி னெதிரே அக்கினி வளர்த்து அதிலே நந்தனரை மூழ்கச் செய்தனர். நந்தனர் தீக் குளித்து நடராஜப் பெருமானின் பூர்ண அனுக்கிரகத்தையும் பெற்று திவ்ய தேஜஸ் வீச ஜடா மகுட தாரியாய் வெளியே வந்தார்.'

'ஆ, அந்த தீட்சதர்கள் தீயிலும் புடம் போட்டு எடுத்தார்களா? மேலென்ன நடந்தது?'

'ஞானசபையிலே நடராஜப் பெருமானுடைய மூர்த்திகரத்திலிருந்து ஞானஒளி வீசியோடி நந்தனரைப் பிணித்தது. சபை ஒரே ஒளி மயமாயிருந்தது. மானிடர்களால் அடையவியலாத பெரிய பேற்றை நந்தனர் பெற்றார்...'

'இன்னுமென்ன பெற்றான், சொல்லும், சிக்கிரம் சொல்லும்.' (வேதியருடைய சப்த நாடிகளும் கடகட் வென்று ஆடின. உடல் துடியாய்த் துடித்தது. ஞானப் பசியின் ஏக்கம் அவர் முகத்தில் நன்கு தோற்றமளித்தது.)

'அந்த நடராஜப் பெருமானிடமிருந்து வெளித் தோன்றிய ஒளி நந்தனரை ஜோதிப் பிழம்பாக்கிற்று. இமை கொட்டும் நேரத்தில் அந்த ஜோதிப் பிழம்பு மூர்த்தியின் பால் இழுக்கப்பட்டு நடராஜப்பெருமானுடன் ஒன்றிக் கலந்தது!...'

'ஆ! ஆ!! அந்த பாக்யம்!......'

ஒரு நீண்ட பெரு மூச்சு. அத்துடன் எல்லாம் ஒடுங்கிற்று. ஒரு நல்ல பிரகாசம் அவர் உடலிலிருந்து எழும்பி மேனேக்கிச் சென்று மறைந்தது.

'அம்மா, அம்மா!' என்று காரியஸ்தர் கூக்குரலிட்டார். அம்மா வந்து சேர்ந்தாள். கூக்குரல் கேட்டு அனேகர் ஓடி வந்தனர். பலன்? வேதியர் விண்ணுலகு சென்று விட்டார். உயிர் பிரிந்தும் முகத்தில் தெய்வீக ஒளி பிரகாசித்துக் கொண்டிருந்தது.

* * * *

நந்தன் சிதம்பரத்திலே நடராஜப் பெருமானுடன் இரண்டறக் கலந்தமையும், அது கேட்டு வேதியர் விண்ணுலகு சென்றதும் காட்டுத் தீப்போல எங்கும் பரவியது. ஆதனூர் பறைச் சேரிக்கும் இச் செய்தி யெட்டாமற் போகவில்லை. ஊர்க் கூட்டம் போட்டனர். தாடி நரைத்த பெரிய கிழவன் ஆவேசம் வந்தவன்போல் பேசினன். கூட்டத்தில் உள்ள ஒவ்வொருவரும் மயிர்க் கூச்செறிய, பரவச மேலிட்டுப் பேசினர்.

அன்றைய தினத்திலிருந்து அவ்வூரில் கட்டுப்பாடாகக் குடிப்பதை நிறுத்தினர். தினமும் காலையிலெழுந்ததும் ஸ்நானம் செய்து விபூதி ருத்திராக்கமணிந்து ஒருமுகமாகக் கடவுளை நோக்கி ஸ்தோத்திரம் செய்யாமல் உண்ணுவதில்லை. மாமிச உணவை வெறுத்து, பொய் சொல்லுதல், திருட்டு புரட்டு செய்வதையெல்லாம் ஒழித்துத் தொலைத்தனர். அவர்களுடைய நன் முயற்சியால் சேரியில் ஒரு நந்தனர் மடமும், நடராஜ மண்டபமும் ஒருங்கு நிறுவப் பட்டது. தினசரி பூஜை, புனஸ்காரம், பஜனை தவறாமல் நடக்கும். மார்கழி மாதம் வந்துவிட்டால் ஆதனூர் ஹரிஜனர்களுக்குப் பெரிய திருவிழா சேரிமுழுதும் சிவநாமம் மிகுந்து நிற்கும். பார்ப்பனருக்கு உபதேசித்த நந்தன் குலப் பெருமையை அவர்கள் நெடு நாட்கள் வரை மறந்துவிடவே யில்லை.

...........வள்ளி நீரில் அவ்விடத்தை மிகுந்த துக்கத்தோடு வெறித்து நோக்கினன். நிலா வெளிச்சத்தில் மண்டை யோடு மங்கலாகத் தெரிந்தது. அதன் கண்ணற்ற குழி கள் அவன்மேல் குற்றஞ் சாட்டுவதுபோல் தோன்றியது... அவனுக்கு அதிர்ச்சி ஏற்பட்டது; முகம் வெளுத்தது. அப் படியே தன் வீட்டை நோக்கி ஓடினன்.

# கொலை! ★

(ர. பா. மு. கனி பி. ஏ.,)

★

'நீலக் குயிலோசை நின்னை நினைப்பூட்டுதடி' என்ற அடியை நீட்டித் தன் குயில் குரலில் பாடிக்கொண்டு நடந்தாள் கோகிலா. பாதை கொஞ்சம் கரடு முரடானதுதான். ஆனல், சைனபஜாரிலும், மெரீனவிலும் நடந்து சலித்துப்போன அவளுக்கு அந்த மனோகரமான மாலை வேளையில் மலைகாட்டும் மந்திரஜாலக் காட்சிகளைப் பார்த்துக்கொண்டு நடப்பது உற்சாக மாகத்தான் இருந்தது. தூரத்தே கூட்டமாகக் நீ தெரிந்த தேக்கு மரங்கள் கத்தரித்துவிட்ட கிருப்புத்தலைபோல் காட்சி யளித்தன. பாதை யோரத்தில் நின்ற சிறுமரங்களில் ஊர்க்குருவிகள் போன்ற சிறு குருவிகள் சல்லாபமாகப் பறந்து விளையாடின. காக்கைக்கூட்டங்கள் தாம் படுக்கு மிடத்தை நோக்கிப் பறந்து சென்றன. ஒரு ஆலமரத்தி லிருந்து ஜோடியாய் இரு மைனக் கள் பறந்து சென்றன. ஒன்றின் வாயில் ஒரு ஆலம்பழம் இருந் தது. மற்றென்று அதன் அருகில் 'கிக்கீ' என்று சப்த மிட்ட வாறே காற்றில் மிதந்து சென்றது. ஆற்றுமணலில் எதையோ தொலைத்து விட்ட ஒன்றைத் தேடுவனபோல் இருந்த இரண்டு மணிப்புறுக்கள் காலடி சப்தங் கேட்டுப் பட படவெனச சிறகடித் துப் பறந்தன. மாலை வெயிலின் மங்கிய ஒளியில் அவற்றின் இறக்கையிலுள்ள புள்ளிகள் மின்னின. கருங்குருவி யொன்று பக்கவாட்டில் சாய்ந்து, திறமையான விமானி தன் விமானத்தை ஆகாயத்தில் புரண்டு கொடுக்கும்படி செய்வதுபோல, காற்றில் தன் உடம்பை ஒரு புரட்டுப் புரட்டிச் சென்றது. ஆற்றங்கரையி லிருந்த மரங்கொத்திப் பறவையொன்று போய்விடுவோமா, இன் னுங் கொஞ்சம் வேட்டையாடலாமா என்று யோசிப்பதுபோல, உட்காருவதும், பறப்பதுமாக இருந்தது. இவற்றை யெல்லாம் தன் கவிதைக் கண்கொண்டு நோக்கினள் கோகிலா. (நவீன கவி தைகளைப் படித்ததன் பயனகத் தனக்கும் கவிதைக்கண் உண் டாய் விட்டது என்பது அவள் எண்ணம்.)

கோகிலாவின் தந்தை நாராயணசர்மி ஒரு எஞ்சினீயர். அவ ருக்குப் பாபவிநாசம் மலையில் நடந்த அணைக்கட்டு வேலையில் உத்தியோகம். கீழ் அணையின் பக்கத்தில் அவருக்கு ஒரு பங் களா கொடுக்கப்பட்டிருந்தது. கோடை விடுமுறைக்காகச் சென்னையிலிருந்து கோகிலா பாபவிநாசம் வந்திருந்தாள். பாப விநாசம் மலையிலிருந்த அழகிய காடுகளைத்தான் மனிதனின் கோடாலி அழித்து விட்டதே! இருந்தாலும், பம்புத்தண்ணீரை

யும் ஹாஸ்டல் வர்சத்தையும் சொர்க்கம் என்று எண்ணி இருந்த அவளுக்கு மலையிலுள்ள காட்சிகளும் ஆறும் இயற்கை இன்பத்தைப் பிழிந்து தருவதுபோல் இருந்தன.

கண் முன் தோன்றிய இன்பக் காட்சிகளை ரசித்துக்கொண்டு வந்த கோகிலா ஒருபுறமாக ஓடிக்கொண்டிருந்த ஆற்றை நோக்கினாள். மேலேயுள்ள பெரிய அணையில் தண்ணீர் தேக்குவதற்காக அணையை அடைத்து விட்டார்கள். கீழே தண்ணீர் வற்றி விட்டது. வெள்ளிநிற மீன்கள் துள்ளிவிழும் அழகைப் பார்த்துக்கொண்டு நின்றாள். ஆற்றின் ஓரத்தில் கிடந்த ஒரு பள்ளத்தில் அவள் பார்வை சென்றது. ஆறு நிறைந்து தண்ணீர் சென்றால் அந்த இடம் கசமாகவே இருக்கும். நீள மீன்கள் நீந்தி விளையாடுவதைப் பார்த்துக் கொண்டிருந்த அவள் தண்ணீரில் எதையோ கண்டு திடுக்கிட்டு விட்டாள். ஒருவேளை புலியின் நிழலைத் தண்ணீரில் பார்த்துவிட்டாளோ என்று நினைக்க வேண்டாம். நாட்டுப் புலிகள் வாழும் காட்டிலா நிஜப்புலிகள் வரப்போகின்றன! அவளைத் திடுக்கிட வைத்தது தண்ணீரின் அடியில் கிடந்த ஒரு மண்டையோடு. அதனுடைய கண் இருக்கவேண்டிய குழிகள் அவளை நோக்குவனபோல் தோன்றின. 'கொலை. ஆமாம் ஒரு கொலை நடந்திருக்கிறது. கொலை செய்யப்பட்டவன் அங்கே எறியப்பட்டிருக்கிறான்' என்று நினைத்தாள். பயத்தால் அவள் உடம்பு நடுங்கிற்று. இருந்தாலும் ஒரு முரட்டுத் தைரியத்தோடு இன்னும் சற்று அருகில் சென்று கவனித்தாள். அந்த மண்டையோட்டின் அருகில் கிடந்த மற்ற மனித எலும்புகள் அவள் தீர்மானத்தை உறுதிப் படுத்தின. இதைத் தன் தந்தையிடம் தெரிவிக்க வேண்டுமென்று எண்ணினாள். இருள் கவிந்து கொண்டிருந்தது. கொலையாளி திடீரென்று அங்கே தோன்றுவானோ என்று சந்தேகிப்பவள் போல் திரும்பித் திரும்பிப் பார்த்துக்கொண்டே விரைவாய் நடந்து தன் தந்தையின் பங்களாவையடைந்தாள்.

இருள் கவிந்து விட்டது. கிழக்கிலிருந்து பதினாலாம் பிறைச் சந்திரன் வெளிவந்து கொண்டிருந்தான். அதே இடத்தில் மற்றொரு உருவம் தோன்றியது. அது கருப்புப்புடவை யுடுத்திய வள்ளிதான். ஏழ்மையுடன் கூடிய அவள் அழகு அவ் விரவிலும் பிரகாசித்தது. தெற்கும் வடக்கும் யாராவது தன்னைக் கவனிக்கிறார்களா என்று பார்த்துக் கொண்டாள். அந்த நேரந்தான் அவளுக்கு சௌகரியமாக இருந்தது, மின்சாரத் தொழிலாளர் 'லைனை' விட்டு வெளியே வர. ஏதோ பழைய ஞாபகம் என்ற நெருப்பு அவளைச் சுட்டுக் கொண்டிருந்தது. இல்லை, அந்த ஞாபகந்தான் அவள் கழுத்தில் கைகொடுத்து அந்த இடத்திற்குத் தள்ளிக்கொண்டு வந்தது. அந்தப் பயங்கர இரவு அவள் நினைவிற்கு வந்ததும் அவள் கண்களிலிருந்து வடிந்த கண்ணீர் கன்னத்தை நனைத்தது. அன்று இரவு.........

மழை இலேசாகத் தூறிக் கொண்டிருந்தது. அவள் கிழக் கணவன் வாட்ச்மேன் சங்கரன் கையில் 'டார்ச்சு' லைட்டுடன் 'பவர் ஹௌஸி'லிருந்து, தன் வழக்கத்திற்கு மாறாக நடு இரவில் வீட்டிற்கு வந்தான். அப்போது வள்ளி அவள் காதலன் கந்தனுடைய கரங்களுள் கட்டுண்டு கிடந்தாள். சங்கரனுக்கு ஏற்கனவே வள்ளியின் பேரில் சந்தேகம் இருந்திருக்கவேண்டும். திடீரென அவர்கள் மேல் 'டார்ச்' வெளிச்சம் பட்டது. திடுக்கிட்டு விலகினுள் வள்ளி. வெளிச்சங் கொடுத்துக் கொண்டிருந்த டார்ச்லைட் தரையில் கிடந்தது. சங்கரன் கையில் ஒரு பளபளத்த கத்தி மின்னிற்று. வள்ளி முகத்தை மூடிக்கொண்டாள். குறட்டை விடுவதுபோல ஒரு சப்தம் மட்டுங் கேட்டது. வள்ளி கூச்சலிட்டிருந்தாள். ஆனல், அந்தக் கிழவன் சங்கரனின் உறுதியான கைகள் அவள் வாயை மூடி, சத்தம் வெளிப்படாதபடி செய்தன. அவள் பனம் பட்டபாடு...அவன் கூட ஒத்தாசை செய்யா விட்டால் அவளையுங் கொன்று விடுவதாகப் பயமுறுத்தினன் சங்கரன். இந்த இடத்திற்குத்தான் கந்தனின் உடலைத் தூக்கி வந்தனர். அதோடு இரு பெரிய கற்கள பிணைக்கப்பட்டன. பின் அவளுடைய ஒத்தாசையால் அந்தக் கசத்துள் அவள் அருமைக் காதலனின் உடலை எறிந்தான் சங்கரன். 'சளப்' என்ற சப்தத் தோடு அது தண்ணீருக்கு அடியில் சென்று விட்டது. அப்போது ஆறு நிறைந்து தண்ணீர் போய்க் கொண்டிருந்தது.

வள்ளி தண்ணீரில் அந்த இடத்தை மிகுந்த துக்கத்தோடு வெறித்து நோக்கினுள். நிலா வெளிச்சத்தில் மண்டையோடு மங்கலாகத் தெரிந்தது. அதன் கண்ணற்ற குழிகள் அவள் மேல் குற்றஞ் சாட்டுவதுபோல் தோன்றின. இன்னும் சற்று நெருங்கிப் பார்த்தாள். மற்ற எலும்புகளும் பக்கத்தில் கிடந்த இரு பெரிய கற்களும் இலேசாகத் தென்பட்டன. அவளுக்கு ஒரு அதிர்ச்சி ஏற்பட்டது. அவள் முகம் வெளுத்தது. அப்படியே தன் வீட்டை நோக்கி ஓடினுள். "கந்தன் தலை தண்ணிக்கு வெளியே தெரியுது. அவரு என்னெப் பாத்தாரு. அவரு என்னப் பாத்தாரு" என்று கூச்சலிட்டுக்கொண்டே, தொழிலாளர் லைனில் ஓடினுள். அவள் தலைமயிர் அலங்கோலமாகக் கிடந்தது. குழந்தைகள் பயந்து ஒளித்தன. குடிசைகளி லிருந்து பல தலைகள் அவளைப் பார்க்க வெளியே நீண்டன. திறந்து கிடந்த தன் வீட்டிற்குள் ஓடி மறைந்தாள் வள்ளி.

* * * *

"அம்மா, ஷெர்லக் ஹோம்ஸைப்பற்றிப் படித்து உன் மூளையே கெட்டுப் போய்விட்டது. கொலையாவது ஒண்ணாவது! அப்படி ஏதாவது இங்கே நடந்திருந்தால் இதுவரை விஷயம் தெரியாமலா போகும்?" என்று கோகிலாவிடம் சொல்லிக் கொண்டிருந்தார் அவள் தந்தை நாராயணசாமி.

"அப்பா, எனக்கு என்னமோ அப்படித்தான் தோணுது. நீயே அந்த இடத்தைப் போய்ப் பார்......"

**யுத்த காலங்களிலும் சரி, சமாதான காலங்களிலும் சரி, பிற தேசங்களின் அந்தரங்க நோக்கம், திட்டம், பலம், செயல்களைக் கண்டறிய ஒவ்வொரு தேச அரசாங்கமும் எப்படி உளவறியும் படைகளை வைத்து வேலை செய்கின்றன என்பதையும், இவ் வுளவறியும் படை மேனாட்டில் முதன் முதல் ஸ்தாபன ரீதியாக யாரால் ஏற்படுத்தப்பட்டது என்பதையும் இக்கட்டுரையில் படித்து அறியலாம்.**

# உளவறியும் படை

(R. சுந்தர விநாயகம்)



யுத்தத்தில் ஈடுபட்டிருக்கும் ஒவ்வொரு நாடும் எதிரியின் திட்டம், நோக்கம், பலம், செயல்களைக் கண்டறிதல் அவசியம். இவற்றின் உளவு அறிய பல நாடுகள் வேண்டிய முயற்சி எடுத்து பல ஸ்தாபனங்களை நியமித்திருக்கின்றன. இதற்கு உளவறியும் படை என்று பெயர். எல்லாப் படைகளை விட இது மிகவும் வலிமை பொருந்தியது. சில சமயங்களில் இப் படையே ஒரு நாட்டின் வெற்றிக்கு முக்கிய காரணமாயிருக்கும். இந்த உளவு அறியும் ஸ்தாபனம் முதன் முதல் குரோம்வெல் (Cromwell) காலத்தில் ஆங்கிலேயரால் தான் உண்டாக்கப் பட்டது. அதுதான் உலகில் அதிக பலமுள்ளதாகவும், சிறந்த முறையிலும் நடை பெற்று வந்திருக்கிறது. கெஸ்டபோ (Gestapo) என்று சொல்லப்படும் ஜெர்மனியின் ரகசிய போலீஸ் ஸ்தாபனம் ஆங்கிலேயருடையதைப் போல் சிறந்த முறையில் நடத்தப்படா விடினும், பலாத்கார முறையினாலும், மக்களின் மிலேச்சத் தன்மையாலுமே எங்கும் பரவ ஆரம்பித்தது. இவ்வாறே ரஷ்யாவும், ஜப்பானும் கூட பல ஸ்தாபனங்களைக் கொண்டிருக்கின்றன: யுத்த சமயத்தில் தான் இந்த உளவறியும் படையின் வேலை மிகவும் பொறுப்பு வாய்ந்ததாகவும் முக்கியமானதாகவும் இருக்கும். தங்களுக்கேற்படும் அனேக ஆபத்துக்களுக்கும் அஞ்சாது கொண்டுவரும் முக்கிய செய்திகளே பகைஞரை அழிக்கும் கூர்மையான ஆயுதமாக இருக்கும்.

---

"சாமி, கொலை!" என்று வேலைக்காரன் வேறு பதற்றத்துடன் சப்த மிட்டான். நாராயணசாமி விரைவாய் வெளியே வந்தார். கோகிலாவும் பின் தொடர்ந்தாள்.

"வாட்ச் மேன் சங்கரன் அவன் பெஞ்சாதி வள்ளியைக் கொன்னு போட்டானுங்க. எல்லாரும் ஓட்ராங்க. அவன் அவளைக் கொலை செய்திட்டானுங்க" என்றான் வேலு மிகுந்த பீதியோடு.

பிரான்சின் வீழ்ச்சிக்கு முக்கிய காரணம் இந்த ரகசிய போலீஸ் ஸ்தாபனம் தற்சமயம் சிறந்த முறையில் நடைபெறுமையேயாகும்.

பிரான்சு வீழ்ச்சியுற்ற சமயத்தில் சுமார் 2000 ஜெர்மானிய உளவாளிகள் அங்கு வேலை செய்தனர். ஜெர்மனியிலோ இரண்டு பிராஞ்சு துப்பறிபவர்களே இருந்தனர். ஹாலந்து, பெல்ஜியம், முதலிய நாடுகளைத் தாக்குவதற்கு முன் ஜெர்மன் ரகசிய போலீஸ் அதிகாரி பிராஞ்சுப் படைகள் இருக்கும் இடத்தையும், அவற்றின் நலிந்த நிலைமையையும், நவீன ஆயுதங்களின் விவரங்களையும் உள வாளிகளால் நன்கு அறிந்து கொண்டனர். பெல்ஜியத்திலிருந்து பாரீஸுக்கு ஒழுங்கின்றிப் பின்வாங்கும் பிராஞ்சுப் படையை ஜெர் மானியர் அரைமணி நேரத்திற் கொருமுறை வேவுகாரர்களால் அறிந்து அதைப் பின்தொடர்ந்து, பதுங்கி இருந்த துருப்புகளை எல்லாம் அழித்தனர். தொழிற்சாலைகளில் உளவாளிகள் ரகசிய மாகப் புகுந்து உற்பத்தித் தளவாடங்களையெல்லாம் கெடுத்தனர். ஜெர்மானியரின் சதி ராணுவத் திட்டத்தில் மாத்திரமின்றி ஜன சமூகத்திலேதான் அதிக பலனைத் தந்தது என்றால் மிகையா காது. குடிகளிடையே ஒழுங்கீனத்தையும், குழப்பத்தையும் விதைப்பதுதான் இவர்களின் முக்கிய நோக்கம். பிரான்சு வீழ்ச் சிக்குமுன் பிரஞ்சுக்காரர் அனைவரும் ஒன்றுபட் டிருக்கவேண்டிய தருணத்தில் அங்கு பிணக்கும், குழப்பமும் குடி கொண்டன. இப்படையின் சூழ்ச்சியால் நாட்டின் பாதுகாப்புக்கும் ராணுவத் தின் பலத்துக்கும் ஆபத்து விளைந்தது.

இத்தகைய ஆபத்துக்களை விளைக்க இங்கிலாந்து எதிரி களுக்கு இடந் தரவில்லை. எதிரி உளவாளிகளைத் தடுத்ததன்றி ஆங்கிலேய துப்பறிபவர்களே ஜெர்மனிக்குள் சென்று பெரும் பயன் அடைந்து வருகின்றனர்.

பிரான்சு வீழ்ச்சிக்குப் பிறகு ஜெர்மானியர் இங்கிலாந்துக்குள் நுழைய தயாராயிருந்தபோது ஆங்கிலேய ரகசியப் போலீஸ் ஸ்தா பனம் இதைத் துப்பறிந்து, தாக்கப் புறப்படும் சமயம் பார்த்து வட பிரான்சின் துறைமுகப் பட்டினங்களிலுள்ள ஜெர்மானிய யுத் தக் கப்பல்களை ஆங்கிலேய ஆகாய விமானங்கள் குண்டுமாரி வரு ஷித்து அழித்துக் குலைத்தன.

சமீபத்தில் நீர்மூழ்கிக் கப்பல்களில் அமெரிக்க ஐக்கிய மாகா ணக் கரையோரம் சில ஜெர்மன் வேவுகாரர்கள் வந்திறங்கினர். பெரிய பாலங்களை இடிப்பது, ராணுவ தளவாட உற்பத்தி சாலை யைத் தகர்ப்பது, கம்பியில்லாத் தந்தி நிலையங்களைக் குலைப்பது முதலிய ஒவ்வொரு சதித் தொழிலை இயற்றுவதற்காகவே இவர் கள் அங்கு வந்தனர். இதற்கு வேண்டிய மிகவும் சிறந்த நவீன கருவிகளையும் கொண்டிருந்தனர். பாக்கிய வசமாக, இந்த ஏழு உளவாளிகளும் அமெரிக்கப் போலீஸால் பிடிக்கப்பட்டு உடனே கொல்லப்பட்டனர்.

சென்ற மகா யுத்தத்தில் கெய்ஸரின் குமாரனுன ஜோயக்கீம் (Joachim) என்பவன் இந்த அபாயகரமான ரகசிய போலீஸ் ஸ்தாபனத்தில் ஈடுபட்டு உளவறிய பிரான்சு தேசத்திற்குள் வந்தான். ஆனால், இவ் வுயர்ந்த அதிகாரியைப் பிரான்ஸிலுள்ள பிரஞ்சு எதிர் துப்பறிபவர்கள் பிடித்து விட்டனர். உடனே அவனைக் கொல்லுதற்குப் பதிலாக பிரஞ்சு ராணுவ தலைமை அதிகாரி அவனை வேறுவிதத்தில் பிரயோஜனப் படுத்திக் கொண்டார். அதாவது ஜெர்மனிக்கு ஒத்துழைப்பவன்போல் நடிக்கும் ஒரு பிராஞ்சு வேவுகாரனுல் ஜோயக்கீம் என்ற ஜெர்மன் அரசிளங் குமரன் காவலினின்றும் விடுவிக்கப் பட்டான். இப் பேருதவிக்குப் பிரதி உபகாரமாக கெய்ஸரின் புதல்வர் இப் பிராஞ்சு வேவுகாரரை உண்மையில் தனக்கு உழைப்பவரென்று நம்பி தன் பக்கத்திலேயே சதா வைத்துக் கொண்டனர். இவ்வாறு அப் பிராஞ்சு உளவாளி அரசகுமாரனுடன் ஜெர்மனி முழுமையும் பின் தொடர்ந்து மிகவும் முக்கியமான பல ரகசியச் செய்திகளை அறிந்து அடிக்கடி பிரான்சு ராணுவத் தலைவருக்குத் தெரிவித்துக் கொண்டு வந்தார். தக்க சமயம் பார்த்து ஒரு நாள் திடீரென பல அபூர்வமான உளவுச் செய்திகளுடன் அவர் மறைந்து பிரான்சுக்கு வந்து சேர்ந்தார். இதன் காரணமாக, தன் நாட்டிற்கு அபஜெயத்தைத் தேடித் தந்ததை உன்னி யுன்னி வருந்தி ஜோயக்கீம் 1919-ம் ஆண்டு மனம் புழுங்கி இறந்தான் என்றுல், உளவறியும் படையின் வலிமைதான் என்னே!

இன்றைய மகா யுத்தத்திலுங்கூட உளவறியும் படையால் பல அபூர்வமான செயல்கள் நடந்து கொண்டு வருகின்றன. அவற்றின் இரகசியங்களெல்லாம் யுத்தம் முடிவடைந்த பிறகுதான் தெள்ளெனத் தெரியும். நேச நாட்டின் ரகசியப் படையின் பலம் நாளுக்கு நாள் செழித்தோங்கி, இன்றைய யுத்தத்தில் நேச நாட்டினர் என்றும் அழியா வெற்றியடைய இறைவன் அருள் புரிவாருக.

---

# விஞ்ஞானமும் எண்ணும் எழுத்தும்

(டி. பி. நவநீத கிருஷ்ணன், M. A.)

(சென்ற இதழ் தொடர்ச்சி)

குருமார்கள், ஆட்சியாளர், இன்னோரன்ன உயர்ந்தோருடன் தொடர்பு கொண்டிருந்த கலைகள் மேன்மையானவையென மதிப்புறலாயின. தொழுவர், உழவர் இன்னோரன்னவருடன் இணைந்திருந்த கலைகள் கீழானவையென தாழ்த்தப்பட்டன. வைத்திய முறை, மிகவும் மேலான சாத்திரம் என்று மதிக்கப்பட்டது. ஏனெனின், ஆட்சியில் வன்மையானவர்க்கு, வைத்தியரின் தேவை அடிக்கடி யேற்பட்டது. நோய்களுக்கான காரணங்கள் மறைவியலானவை யாதலின், வைத்தியம் நீண்டகாலமாய் மந்திரத்துடன் சேர்ந்து வந்துள்ளது. கோயில்களுடன் குருமார்களே மந்திரத்தின் துணைகொண்டு வைத்தியம் செய்து வந்தனர். கைகளைக் கொண்டும், ஆயுதங்களைக் கொண்டும், 'கை வினைத்திறன் ஊறுநீக்குக் கலை' (ஸர்ஜரி) மதிப்புப் பெறவில்லை; ஊறுகளாலும், காயங்களாலும், துன்பத்துக் குள்ளானவரில் பெரும்பாலோர் தொழிலாளிகளும், உழவர்களுமே அவ் வூறுக்களுக்கும் காயங்களுக்குமான காரணங்கள் வெளிப்படையானவை. பண்டைக்காலத்து எகுபதியரால் எழுதப்பட்ட வைத்திய நூல்கள் பலவுள. அவற்றில் ஒன்றேனும் நல்வகையானதாயில்லை. அக் காலத்திய 'கை வினைத்திறன்-ஊறு நீக்குக்கலை' இயலான நூல்கள் சிலவே யாயினும், அவை யெல்லாம் நன்முறையானவை. அவற்றில், கி. மு. 2500-ம் ஆண்டில் எழுதப்பட்டதான நூலொன்று, சிறந்த முறையில் எழுதப்பட்டுள்ளது. அந்நூலில், உடலின் பல பாகங்களிலும் நேரிடக்கூடிய ஊறுகளைப்பற்றி, தலையினின்று காலுக்கு படிப்படியாய் வரும் முறையை யொட்டிய ஒழுங்குடன், வகையீடு செய்து, எழுதப்பட்டுள்ளது. ஊறுகளையும் காயங்களையும் பரிசோதித்துப் பார்க்கும் வகைகளும், அவ் வகைகளைக் கையாள்வதால் காண்பதைக் கொண்டு, முடிவுகளைப் பெறும் வழிகளையும், அவ்வூறுகளை நீக்கும் முறைகளையும்பற்றி விரிவாய் விளக்கப்பட்டுள்ளது. தேர்வுற்ற நன்முறையில் ஊன்றிக் கவனித்தலாலும், அனுபவத்தினாலும், பெற்ற அறிவைக் கொண்டே அந்நூல் எழுதிப் பட்டிருக்க வேண்டும் எனத் தெளிவாகின்றது. அந்நூலின் பாராட்டற்குரிய பகுதி, அதில் நீக்க முடியாதனவையென, பதினான்கு வகைகளை நேர்மையுடன் எடுத்துக் காட்டியுள்ளதே யாம். இது போன்ற பண்பு, மந்திரவியலான வைத்திய முறைக்கு முற்றும் எதிர்த்தது. மந்திர வைத்தியர், உடலைப்பற்றியும் உயிரைப் பற்றியும் தாமுமறியாத தொன்றுண்டு என என்றும் ஒப்புக் கொள்ளார். அக் காலத்திய ஊறு நீக்கு இயலான அறிவு, வைத்தியச் சிகிச்சை முறையான அறிவைவிட மேன்மையாய் இருத்தற்குக் காரணம், முன் கூறியது, வினைசெய்வகைகளால் பெற்றதாயிருந்ததாலே யாம். அவ் வியலான அறிவு, பிழைபடுதற்கு, ஏதுவில்லை. அக் காலத்திய ஊறு நீக்கு இயலான அறிவை விஞ்

ஞானீய மானதென்று எதன் நிமித்தம் நாம் போற்றுகின்றோமோ, அதே காரணத்தை முன்னிட்டு, அது கீழ் வகையினது என அக் காலத்தினரால் இகழப்பட்டது

நகரியலான வாழ்க்கை முறை வளர்ச்சியுற்றதால் விளைந்த சமூக அமைப்பு முறையில், பல தொழிலாளிகளும் கலைஞரும், வணிகரும், ஆட்சியாளரும் படிப்படியான முறையில் அமைந்த ஏற்றத்தாழ்வான நிலைமைகளைப் பெற்றனர். எல்லாவற்றிற்கும் காரணமானதென கொள்ளப்பட்ட மந்திரசக்திக்குப் பொறுப்பாளிகளான குருமார்களும், அவர்களைச் சார்ந்திருந்த எழுத்தாளரும், சமூகத்தில் உயர்ந்த நிலைக்கு எழுந்தனர். பல வகை சேனைகளைக்கொண்டு வலியுற்ற அரசரும், அவராட்சிக்கு இன்றியமையாதவரும் அவருடன் நேரே தொடர்பு கொண்டிருந்தவருமான போர் வீரரும் அடுத்த கீழ்ப்படியான நிலைமையை எய்தினர். விளைவுப் பண்டங்களை வாங்கியும் விற்றும் வந்த வணிகர் அதற்கடுத்த கீழ்ப்படியில் அமைந்தனர். உழவர், தொழுவர் இன்னோரன்ன வினைஞர் சமூகத்தின் அடிப்படியில் வைக்கப்பட்டனர். இவ்வகையான சமூக அமைப்பு முறை, போரை மூட்டும் வகையில் அமைந்தது. போர் முறையையே சிறப்பியலாய்க் கொண்ட ஒழுங்கான படையமைப்புடன் போர்மேல் செல்வதற்கு அனுகூலமாயிற்று. போரில் வேற்றி பெற்றவர் தோல்வியுற்ற நாட்டின் மக்களை அடிமைகளாக்கினர். அவரைக் கொன்று விடுவதைவிட, அடிமைகளாய்க் கொள்வதால், இலாபம் உண்டு எனக் கர்ணப்பட்டது. அவ் வடிமைகளை உலோகத்தொழில், நெசவுத்தொழில், குயத்தொழில், உழவுத்தொழில் இன்னோரன்னவற்றில் பயிற்றுவித்து, நாளடைவில் அத்தொழில்களை அவ் வடிமைகளைக் கொண்டே செய்விக்கலாம் என்று காணப்பட்டது. இவ்வகையில், தொழில் செய்தல் அடிமையியல்பு என ஏற்பட்டது. எனவே, தொழின் முறைகள் கீழான நிலைமையை யடைதற்கு இதுவும் ஏதுவாயிற்று. உழவுத்தொழின் முறையாலும், உலோக உருக்கியல் கலைகளாலும், சக்கிரவியல் கலைகளாலும், கப்பலோட்டும் நாவாய்க் கலைகளாலும், கட்டிட வேலையியலாலும், அற்புதமான புதுமுறைகள் பலவற்றாலும், உலகத்தை, புதுக்கற காலத்தினின்றும் உலோக காலத்திற்குக் கொணர்ந்த அரும்பெரும் தொழில் வீரர்கள், அடிமைகள் நிலைமைக்குத் தாழ்த்தப்பட்டனர். புதுமுறைகள் கண்டுபிடித்தற்கான இயல்கள் செழித்திருந்த காலத்தின் இறுதிப் பகுதியிலேயே, அதாவது நகரவியல் போரியலைப் பெருக்கி, அடிமைகளைப் பிடித்து, தொழில்களைத் தாழ்த்திய நிலைமை யேற்பட்டதற்கு நீண்ட காலத்திற்கு முன்னரே, எண்ணும் எழுத்தும் கண்டு பிடிக்கப்பட்டன. அவை, கி. மு. 6000-ம் ஆண்டிற்கும் கி. மு. 3000-ம் ஆண்டிற்கும் இடைப்பட்ட காலத்திலேயே கண்டு பிடிக்கப்பட்டன. இக்காலத்திற்குப் பின் புதுமைகள் கண்டுபிடித்தல் எனும் இயல் மறைந்து, அடிமையியல் முறையின் எழுச்சி ஆரம்பமாயிற்று.

நகரவியல் ஆரம்பமான காலத்தில், அது மக்கள் வாழ்க்கையின் நலத்தைப் பெருக்குதற் கேற்ற வழியில் செல்வதற்கான பாங்குகள் பலவற்றுட னிருந்தது. அவ்வாறு செல்லாது, அது வழி தப்பிச் சென்றதற்கான காரணங்கள் பல. ஆட்சி முறையின் பாற்பட்டவர்கள் ஆக்க முறையில் ஆளும் சிறப்பியல் திறனைப் பெற்றிராதிருந்தது ஒரு முக்கியமான காரணம். அவர்கள் மந்திரவியலான கருத்தை வளர்த்து ஆள முற்பட்டதும், பொதுநலக் கருத்தென்பது இன்னதே யென்றறியாது, தம் நலத்தையும் அதிகாரத்தையுமே பெருக்கும் வழிகளில் ஆட்சி செய்ய ஆரம்பித்ததும், மற்ற முக்கியமான காரணங்களில் சில. தம் நகரத்தில், கடினமான உழைப்பின்றிப் பெருவாரியாய்ப் பொருள்களைப் பெற நேரிட்டதால், நகரத் தலைவர்களில் பேராசையும் அதிகார வேட்கையும் அதிகமாயிற்று. அதனாலேயே, பல நகரங்களிடை யெழுந்த போட்டியை, தம் நலத்திற்கான வழிகளில் பயன்படுத்தலாயினர். வேறு நகரங்களைப் பிடித்துக் கொள்ளையிட்டுப் பொருள் பெறவும், மேலும் அதிகமான மக்கள் மீது தம் அதிகாரத்தைச் செலுத்தவும் ஆன வழிகளிலேயே அவர்கள் கருத்து சென்று, அதற்கேற்ற வகையில் அவர்கள் போர்களை மூட்டினர். இவ்வாறு செய்யாது, நகரங்களிடை போட்டி எழுந்தபோது, போட்டியால் எழும் ஊக்கத்தை ஆக்க வழிகளில், அவர்கள் செலுத்தியிருந்தாரே யாயின், உலக சரித்திரமே வேறு விதமா யிருந்திருக்கும். ஆனால், அவ்வாட்சித் தலைவர்கள், அவர்கள் சென்றவழியே சென்றதால், இன்றைய நிலைமை யேற்பட்டுள்ளது. இந் நிலைமையை மாற்றி, மக்களிடை நல்வாழ்க்கையை நிறுவுதலே தம் நோக்கமென்றும், அந் நோக்கத்தை நிறைவேற்றுதற்காகவே போர் தொடுத்துள்ளோம் என்றும், போரிடும் நாடுகளின் ஆட்சியாளர் எல்லோரும் சொல்கின்றனர். எல்லா மக்களிடையும் நல்வாழ்க்கை ஏற்படுதற்கு தாம் கொண்டுள்ள ஆட்சி முறையே சிறந்ததென்றும், அவ்வகையான ஆட்சி முறையை நிறுவுவதே தம் குறிக்கோள் என்றும் அவர்கள் பறைசாற்றுவிக்கின்றனர். இதனாலேயே, இப்பொழுது எழுந்துள்ள போர், நாடுகளிடையான தொன்று அன்று என்றும், அது 'கருத்தியலான' (ஐடியலாஜிகல்) போர் என்றும் சொல்லப்படுகின்றது. நகரவியலான ஆட்சி முறை, அது தோன்றிய சிறிது காலத்திற்குள்ளாகவே நேர்வழியில் செல்லாது, வழிதப்பிச் சென்று விட்டது என்பதை எல்லோரும் ஒப்புக் கொள்கின்றனர். ஆங்கிலேயர், தாம் அது வழி தப்பியதை வெகு காலத்திற்கு முன்பே கண்டு பிடித்து, சரியான வழியே செல்லும் ஜனப் பிரதிநிதித்துவ ஆட்சி முறை (டெமோக்ரேடிக் கவர்ன்மெண்டு) யைக் கண்டுபிடித்து நிறுவியதாகவும், அம் முறையையே உலக முழுதும் நிறுவுதலே தம் கருத்து என்றும் சொல்கின்றனர். அமெரிக்கரும் அவ்வாறே சொல்கின்றனர். இம் முறைகளில் பழங்காலத்து மந்திரவியலான கருத்துக்களும், இக்காலத்து மந்திரவியலான கருத்துக்களும், விஞ்ஞானீயக் கருத்துக்களும் இன்னும் பலவும் கதம்பமாயுள்ளன. பல முரண்பாடு

கள் உள்ளன. அவற்றைப்பற்றி எடுத்துக்கூற இடமில்லை.
ஆனால், இவற்றைப்பற்றி அவர்களைக் கேட்டால், 'எல்லாம் சரி
தான். எங்கள் எண்ணம் நல்லெண்ணம். எங்கள் நோக்கம் மக்க
ளின் நல்வாழ்க்கை. இம்மந்திரங்களை ஜபித்துக்கொண்டே நாங்
கள் தட்டுத் தடுமாறியேனும் சரியான பாதையிலே செல்கிறோம்"
என்று விடையளிப்பார்கள். ஹிட்லரியல் முறையில், நமது பண்
டைக்காலத்து தேவாம்சக் கோன்மை ஆட்சியின் கருத்துள்ளது.
அதாவது, வன்மை மிக்க ஆட்சியாளர் ஒருவர் நாட்டை யாள
வேண்டும். அவர் பொதுநலம் பேணி சிறப்பியல் அறிஞரை
யும் கலைஞரையும் கொண்டு, தமது குடிமக்களின் நல்வாழ்க்
கைக்கேற்ற வழிகளில் ஆளவேண்டும் என்பது. இம்முறையில்,
குடிமக்களின் அறிவு சிறிதேயானதால், அவர்களை அவர்களின்
நன்மைக்காகவே மந்திரவியலான சொற்களைக் கொண்டே மயக்க
வேண்டும் என்ற கருத்து உள்ளது. ஹிட்லரியல் முறையைப்
பின்பற்றுவதால், நகரவியல் வாழ்க்கை அது சென்ற வழியே
செல்லாது, சரியான பாதையில் சென்றிருந்தால், இப்பொழுது
என் நிலைமை ஏற்பட்டிருக்குமோ, அந் நிலைமையைப் பெறலாம்
என்று அம் முறையைப் பறைசாற்றுபவர் கூறுகின்றனர். அதா
வது, அம்முறை சரியான பாதையை யடைவதற்கான குறுக்கு
வழி. பொது வுடைமை—சமுதாய வியலான கருத்து, நகரவிய
லான சமூக முறை, நல் வாழ்க்கைக்கு ஏற்ற வழிகளில் செல்லா
திருந்ததற்கான காரணங்கள் என நாம் மேலே எடுத்துரைத்த
வற்றைக் கண்டு, அவ்வாறெழுந்த இன்னல்களை நீக்கி, சரியான
பாதையில் செல்வதே என்பதாம். ஆனால், இம்முறையில், அப்
பாதையினின்று பிரிந்தபின் உலகில் ஏற்பட்டவையான விஞ்ஞா
னீய வளர்ச்சி இன்னோரன்னவற்றின் விளைவுகளையும் பயன்படுத்
திக் கொள்ள வேண்டும் என்ற கருத்தும் உள்ளது. அதாவது,
சிறப்பியல் தொழின் முறைகளை இப்பொழுதுள்ள நிலைமைகளி
லேயே ஏற்றுக்கொள்ள வேண்டுமேயன்றி, நகரவியல் வாழ்க்கை
ஆரம்பமான காலத்தில் இருந்த நிலைமையிலே ஏற்றுக்கொள்ள
வேண்டியதில்லை என்பதே. இம்முறையில் மந்திரவியலை முற்றும்
ஒழித்துவிட்டு அறிவியலான வழிகளிலேயே மக்களை வழக்குவிக்க
வேண்டும் என்பதும் ஒரு முக்கியமான கருத்து. இம்முறைகளைத்
தவிர, மக்கள் நல்வாழ்க்கையைப் பெறுதற்கான வழியை எடுத்
துரைக்கும் மற்றோர் முறையும் உள்ளது. அது, போர்தொடுக்
காத அடிமை நாடு ஒன்றினின்று எழுந்தது. அது, காந்தியியல்
முறை யெனப்படும். அம்முறை, 'இன்று எழுந்துள்ள இன்னல்க
ளெல்லாம், நகரவியல் வாழ்க்கையினின்று தொடர்ந்தவையே.
ஆதலின் நகரவியல் வாழ்க்கை ஆரம்பமானதற்கு முன்னிருந்த
நன் முறையான புதுக் கற்கால வாழ்க்கை முறைக்கு மீண்டும்
செல்லவேண்டும்' என்பதே. எம்முறை வெற்றி யடைந்திடினும்,
தொழிற்கலைகளும் அறிவியல் கலைகளும்' ஆட்சியாளரும் நெருங்
கிய கூட்டுறவான தொடர்புடனுள்ள சமுதாயவியலான வாழ்க்
கைக்கும் ஏற்றதாய் அமையும் என்பது திண்ணம்.

# உலகம் என் உருவமே!

(அல்மைட்டி.)



உண்மையாகவே இக்கட்டுரை ஒவ்வொருவரின் மூளையையும் கலக்கத்தான் செய்யும். கூசாமல் இக் கட்டுரையை பொய் என்று மெய்போல் பொய் பேசலாம்! ஆனால், ஒன்று. இவைகள் அனைத்தும் அனுபவத்தில் பல அறிஞர்கள் கண்ட அழியா உண்மை. இவ் வுண்மையை மனம், வாக்கு, காயம் ஆகிய மூன்றிலும் முறை தவறாமல் இருப்பவர்கள் எளிதில் உணரலாம்.

"நான்; நான்" என்பது உலகத்தில் பொதுவாக வழங்கி வரும் ஒரு அர்த்தமற்ற வார்த்தை! "நான்' என்றால், "நானே தான்" என்று பொய்யை அறியாமையால் மெய் போல் கூறுகின்றனர் மக்கள். மனிதனின் ஒவ்வொரு அவயவத்திற்கும் தனித் தனியாகப் பெயர்கள் இருக்கும்போது "நான்" என்ற வார்த்தைக்கு அர்த்த மென்ன? "நான்" என்ற வார்த்தை இருக்க முடியுமா? எல்லா அவயவங்களும் சேர்ந்து "நான்" ஆனால் "மனிதன்" என்ற வார்த்தைக்கு அர்த்த மென்ன? "மனிதன்" என்ற வார்த்தை பொருந்துமா? ஆதலின், "நான்" என்பது அர்த்தமற்ற தல்லவா? இல்லாத இந்த "நான்"ஐ என்னமோ என்று எண்ணிய வண்ணம் வாழும் அறியாமைதான் என்னே!

பொதுவாக "நான்" ஆகக் கருதப்படுகிற நான், இந்த உலகத்திற்கு வரும்போது எதையும் கொண்டு வரவில்லை; அதன் பின்பும் எதையும் உண்டாக்கியது மில்லை. பிறக்கும் பொழுது கொண்டு வந்ததாகவோ, அல்லது அதன் பின் உண்டாக்கியதாகவோ, யாரேனும் மெய்போல் பேசினும் அஃது ஆபத்துக் காலங்களில் திக்கேழி எண்ணும் நினைவையும், ஜாலம், கனவு, கானல் நீர் முதலியவைகளையும் ஒக்கும்.

இயற்கையாக இருக்கின்றதும், எவருக்கும் பொதுப் பொருள்களாகவும் இருக்கின்ற இவ் வுலகப் பஞ்சபூதப் பொருள்களை அளவுக்கு மீறி அனுபவிக்கக் கருதும் அந்தமில்லா ஆசையின் மதியீனத்தைக் கண்டு வருந்தாமல் யார் தான் இருக்க இயலும்?

நல்ல வெயில். கொஞ்ச தூரத்தில் நீரோடை போன்ற தோற்றம்; ஆனால், பக்கத்தில் சென்றால் ஏமாற்றம். மண்ணாங்கட்டி மாம்பழமாகும் கோலமோ ஒரு பெரிய ஜாலம். என்னை வெறுக்கும் காதலியை தூக்கமென்ற விழிப்பில் கண்டு இன்பமடைகிறேன். உண்மையில் அஃது சூன்யம். நல்ல உறக்கத்

# என்னுள்ளம் புகுந்தான்

பாரதிதாசன்



('காதலென்றே' என்ற பாட்டின் மெட்டு)

மான் வந்ததென்றுரைத்தான் புள்ளி
மான் வந்ததென்றுரைத்தான் —தோழி-

தேன்சிந்திடும் அவன் செந்தமிழ்ச் சொல்லால்
செயல் மறந்தேனே சேயிழை நானே
தானே வேண்டி என்னுடல் தீண்டித்
தையலென் முன்னின்றான் ஒருமுத்தம் என்றான்
தோழியே அகன்றான் —தோழி-

பொன்னவிர் மார்பன் அவன் நடுக்கொன்றோ?
புன்சிரிப்பானன் போக்கிலி அன்றோ!
என்மேல் காதல் எனவன் கொண்டான்
எத்திசை நோக்கினும் அன்னவன் முகந்தான்
என்னுள்ளம் புகுந்தான் —தோழி-

---

தில் ஒன்றுமே தோன்றவில்லை. உறக்கம் என்றால் எதின் உறக்கம்? மனதின் உறக்கம்—நினைப்பின் உறக்கம்! அப்போதுதான் உலகம் சூன்யம். மனம்—நினைப்பு—அதாவது "நாம்" விழித்தால், மாடமாளிகை யென்ன, குட்டிச்சுவரென்ன எல்லாம் தெரியும். ஆனால், இதன் உண்மை காணப்படுவதுபோல் பொய்யாய் காணப்படுகிற இவ் வுலகையும், அதன் (பொய்) பொருள்களையும் மெய் போல் நம் நினைப்பினால் உருவப்படுத்துகிறோம். ஆனால் இவ் வுலகம் பெருஞ்சாலம், கனவு, கானல் நீர் முதலியவைகளைச் சேர்த்த பொய்யான நம் கற்பனை உருவம். இவைகளை மட்டும் நாம் மறவாமல் இருந்தால் இவ்வுலகத்தினை இல்லாமல் செய்யும் வல்லமை நிலையை உடனே அடையலாம்.

இந்தப் பெரிய உலகத்தன்னை இல்லாமல் செய்திடும்
எங்கள் வல்லபம் கண்டாடு பாம்பே. —பாம்பாட்டிச் சித்தர்.

இந்திரசாலம், கனவு, கானல்நீர் என உலகம்
எனக்குத் தோன்ற........ —தாயுமானவர்.

# ஜ்யோதிஷ பல ரகஸ்யம்

### (ஸி. பி. ஆனந்தம்.)



### நூதனக் கோள்களின் இயற்கை வளம்

**'வா**ன் இயல்' அல்லது 'வெளி நிலை'க்கோள் இனங்களில் வருவன இந் நூதனக் கோள்கள் மூன்றும். இவற்றில் யுரேனஸ்ஸும்-நெப்டியூனும் இருள் நிலைகள் என்னும் சாயைகளின் குண அமைப்புகள் வாய்ந்த ஸ்தூலமான கோள்களாகும். குரு-சனிக்கிரகங்களும் 'வான் இயல்'கோள் இனத்து வருவனவே. ஆனால் இவை இரண்டும் இந்திய ஜ்யோதிஷ பல பாகத்தில் சேர்க்கப்பட்டிருக்கிறது. சாயைகளான இராகு-கேதுக்கள் யோக பாவ கணிதங்களுக்குக் கவனிக்கப்படுவதில்லை, அவற்றிற்கு முக்கியம் வாய்ந்தவை குஜாதி பஞ்சக் கிரகங்கள் தாம் இந்நிலையில் இந்த சாயைகளின் குண அமைப்புகளில் வரும் மேலே கூறிய நூதனக் கோள்கள் இரண்டையும் பல பாவத்திற்கு மேலைப்புலவர்கள் முக்யம் வாய்ந்தனவாகக் கருதுகின்றனர். இவ்வழி அவர்கள் அவற்றுக்குக் காணும் பலன்கள் விஞ்ஞான எல்லையின் ஸித்தாந்தங்களையே பெரும்பாலும் ஆதாரமாகக் கொண்டவை. பலன் செய்யும் கோளுக்கு அதன் இயற்கை அமைப்பு முதலில் கவனிக்கத் தக்கது.

இவை இரண்டும் பூமியின் நிழல் வரைக்கு அப்பால் மேற்கில் வெகுதூரத்தே இடம் பெறுகின்றன. இவற்றின் குறுக்களவு-இழுப்பாற்றல்-இனம்-பரப்பு-பரிமாணம் ஆகிய அனைத்தும் குரு-சனிக்கிரகங்களை விட குறைந்தவை. இறுகத்தில் குருவை அடுத்தும் சனியைவிட மிகுதிப்பட்டும் இவை யிருக்கின்றன. சூர்யனிலிருந்து வெகுதூரத்தில் அவை இடங் கொண்டிருத்தலின், குரு-சனியைவிட மிகக் குறைந்த அளவுதான் ஒளி-வெப்பங்களை இவை பெற்று வருகின்றன. அத்துடன் இவற்றுக்கு சூர்யனுடைய காட்சி குரு-சனி மண்டலங்களுக்குக் கிடைப்பதினும் பாதியும்-அதிலுங் குறைந்த தோற்றமே கிடைக்கக்கூடியதாகும். இதனால், இவற்றுக்கு சூர்யனுடைய அருள் மிகவும் குறைவானதாக இருக்கிறது. சூர்யனுடைய அருள் குறைந்த இவற்றில் யுரேனஸ் குளிர்ச்சியும்-வரட்சியும் (Cold and Dry) மிகுந்ததாக ஆகிறது. குளிர்ச்சியில் சனியையும்-வரட்சியில் புதனையும் யுரேனஸ்ஸின் இயற்கைவளம் ஏறக்குறைய ஒத்திருக்கும். இதற்கும் அப்பால் சூர்ய அருள் இதனினும் குறைந்த நெப்டியூனில் வெப்பமும்-ஈரப்பசையும் (Warm Moist) குறைந்திருக்கிறது. வெப்பங்குறைவில் சுக்ரனையும்-ஈரப்பசை யின்மையில் குருவையும்

போல இதன் இயற்கைவளம் மதிக்கக்கூடியதாகும். ஆம், இந் நிலையை குளிர்ந்து ஆறிப்போயிருக்கும் நிலக்கரித் துண்டங்களாக (Dark Diamond Crystals)க் கூறலாம். இது இவற்றின் மேற்பரப்பின் நிலையாகும். இவற்றின் உள்ளே இவைகளின் நிலைப்பிற் (existence) கேற்ற சூழல்களுக்கு வேண்டிய அக்னிக் குழம்பு கொதித்த வண்ணம் இருந்து கொண்டிருக்கிறது. இந்த ஜீவாக்னி இல்லையானால், இவை எப்படி நிலைகொண்டிருக்கும்!

எனவே, சாயைகளின் குண அமைப்புகளில் வரும் ஸ்தூலமான கோள்களான இவற்றிற்கு அந்தச் சாயைகளின் பலன்களைக் கற்பிப்பது பொருத்தமே. அத்துடன், இயற்கை வளத்தின் நேர்மைகளில் முன்னதற்கு புத-சனிக் கிரகங்களின் இயல்களையும், பின்னதற்கு குரு-சுக்ரர்களின் இயல்களையும் ஓரோர் அளவுகளில் பலன்களுக்கும் (Influence-Powers) சேர்த்துக்கொள்ளலாம். இவ் வழி வரும் பலன்களைப் பின்னர் காணுவோம்.

## ஆட்சி முதலிய இடங்கள்

யுரேனஸ்-நெப்டியூன் இவ் விரண்டிற்கும் வானில் வரும் இராசிகள் பனிரெண்டிலும் முறையே கும்ப-மீனங்களை அவ் அவற்றின் ஆட்சி இடங்களாக மேலைநாட்டுப் பல பாகம் கூறுகிறது. இந்திய பல பாகத்தில் வரும் சாயைகளான இராகு-கேதுக்களுக்கு உரிய ஆட்சி வீடுகள் எதுவும் கிடையாது. அவை ஸஞ்சாரத்தில் இடங்கொள்ளும் ராசி அதிபனின் பலத்தை உரிமையாக்கிக் கொள்கின்றனவென்று சொல்லப்பட்டிருக்கிறது. இஃது இவ் வாறாயினும் சில கிரந்தங்களில் மட்டும் இவற்றுக்கு முறையே மிதுனம்-தனுசுகளை ஆட்சி இடங்களாகவும், விருச்சிக-கும்பங்களை உச்ச வீடுகளாகவும், கும்பத்தை இராகுவிற்கு மூலத்ரிகோண பலம் வாய்ந்த ராசியாகவும் கூறியிருக்கிறது. மேலைப்புலவர் காணும் ஆட்சி இடங்கள் சனி-குரு கிரகங்களுக்கு உரியவை. இந்திய பல பாகத்தில் கிரந்தங்கள் சில கூறுவது இதற்குச் சற்று பொருத்தமாகவிருக்கிறது. இராகுவிற்கு மூலத்ரிகோணபலம் வாய்ந்த ராசியான கும்பம் யுரேனஸுக்கும், கேதுவின் ஆட்சி வீடான தனுஸ்ஸுக்குத் தலைவன் குருவின் மற்றொரு ஆட்சி வீடான மீனம் நெப்டியூனுக்கும் ஆட்சி இடங்களாக மேலைப்புலவர் காணுவது குறிப்பிடத் தக்கது. இயற்கை வளத்திலும் முறையே சனி-குரு கிரகங்களை ஒத்திருக்கும் இவற்றிற்கு அந்த சனி-குரு கிரகங்களின் ஆட்சி இடங்களையே கொள்வது பொருத்தமே.

---

தொடர் கதை.

# தேவ தேவி

(சு. மீ. கணபதி)



(சென்ற இதழின் தொடர்ச்சி.)

ஸ்திரீகள் சுதந்திரக் கூச்சல் அர்த்த மற்றது என்றார். அவசிய மானது எனவே நான் கூறுகிறேன். பெரும்பாலான வீடுகளில் ஸ்திரீயை வேலைக்காரியையும் விட கீழ்த்தரமாகவே நடத்துகின்றனர். இந்த நிலைமையை நீடிக்க விடக் கூடாது. இதை நிவர்த்திக்க வழி சுதந்திரம் கேட்பது ஒன்றுதான். நாடு அடிமைப்பட் டிருப்பதற்கும், தன் வீட்டில் கேட்கும் சுதந்திரத்திற்கும் வித்யாச முண்டு. நாடு உடனேயே விடுதலையாகி விடலாம். பெண்களின் கதி என்ன என்பதை நிச்சயிப்பது உடனே சாத்திய மாகாது. காரணம் இன்றுவரை அவர்களை நடத்தி வருவதுதான். வழக்கத்தை இலகுவில் விட்டுவிட மனம் வருதல் சாத்தியமல்ல என்பது எல்லோருக்கும் தெரியும். பிரசாரத்தால் நம் சோதரிகளின் நிலைமை உயர்த்தப்பட வேண்டியதுதான்.

பெண்கள் புத்தி சாதுர்யத்துட னிருக்கலாம். ஆயினும், ஏட்டுக் கல்வியும் அவசியமே. படித்ததால் சிலர் தங்களுடைய பழக்க வழக்கங்களை மாற்றிக் கொண் டிருக்கலாம். இவைகளை மாற்றிக் கொண்டதில் குற்றம் கூறுவது நியாயமல்ல. அவரவர் சௌகரியப்படி பழக்கங்களை மாற்றிக் கொள்ளும் உரிமை இருக்க வேண்டியதுதான். ஆங்கிலத்தில் சம்பாஷிப்பதால் தவறு இல்லை. தன் தாய் பாஷையையும் நன்ருகக் கற்றுத் தேர்ந்த பின்பு இதில் இறங்கலாம். அன்னிய பாஷை எதுவா யிருப்பினும் முதலில் தாய் பாஷைதான் இடம் பெற வேண்டும் என்ற அவருடைய கருத்தை நான் வரவேற்கிறேன்.

அந்தஸ்து விஷயமாய் அவர் கூறியது வாஸ்தவமா யிருக்கலாம். ஆனல் உதவி செய் என்ருரே, அதுதான் சாத்தியமில்லை. சிறிது உதவி செய்தால் மறுபடியும் நம்மிடமே வருவார்கள். இது நீடித்து நடைபெறக் கூடிய காரியமா என சிந்திக்கவேண்டும். உலகம் அன்பில் கட்டுப்பட்டது என்று அவர் கூறியதை எவரும் வரவேற்பார்கள். அந்த அன்பை வாழ்வில் கடைப்பிடிக்க வேண்டியது மிகவும் அவசியம். அன்பும் ஆதரவும் உலகில் இன்றி யமையாதவை. கூடியவரை நிந்திப்பதை விட்டு அன்பு செலுத்த வேண்டியது வாழ்வில் எல்லோரும் கடைப்பிடிக்க வேண்டியது மிகவும் அவசியம். மொத்தமாக மிஸ்டர் வ்ாசுதேவ் அவர்கள் கூறியவற்றை நான் போற்றுகிறேன்—வரவேற்கிறேன். அவர் கூறிய புத்தி மதிகளை சகோதரிகள் அனுஷ்டிக்க வேண்டுமெனக் கேட்டுக் கொள்கிறேன்'' எனப் பேசி அமர்ந்தாள். (கரகோஷம்.)

தலைவர் முடிவுரையாகப் பேசுகையில், "பெண்களுக்கு எல்லாவற்றிலும் சாமர்த்தியமும், நுட்பமான அறிவு மிருக்கிறது. அதை வெளிக் காட்ட முடியாது செய்பவர்கள் ஆடவர்கள் தான் என நான் நினைக்கிறேன். தங்களுக்கு அரசாட்சியிலும் பங்கு உண்டு என்று நினைத்து தேசத்திற்காக அவர்கள் பாடுபட வேண்டும் என்பதுதான் என் விருப்பம்.

ஸ்திரீகளுக்கு எல்லா வகையான அறிவு மிருக்கிறது. அவர்கள் எதைக் கொடுத்தாலும் செய்யும் சக்தி வாய்ந்தவர்கள். ஆடவர்கள் பெண்களுடைய அபிப்பிராயத்தை முக்கியமான விஷயத்தி லெல்லாம் கேட்டு நடந்து கொள்வது நலம். இதனால், அவன் தன் மனைவியின் பேச்சைத் கேட்பவன் என்று யாராவது கூறுவார்களே யானல் அறிவு இல்லாதவர் எனவே கொள்ளுதல் வேண்டும். பெண்கள், தங்கள் ஒவ்வொரு காரியத்திற்கும் ஆடவனையே எதிர் நோக்கிக் கொண் டிருக்கும் பொழுது முக்கியமான விஷயத்தில் ஸ்திரீயின் ஆலோசனையைக் கேட்பதில் தவறு என்ன? அவன் சொன்னபடியே நாம் நடந்து விடுமோமானல் நமது பகுத்தறிவுக்கு வேலை ஒன்று மில்லாமலே போய் விடும். தானகச் செய்வதைக் காட்டிலும், மற்றொருவரைக் கலந்து செய்வதில் நன்மை அவசியம் காண முடியும். இது போன்று செய்துவரின் பெண்கள் சுதந்திரம் என்று கேட்க அவசியம் ஏற்படாது என்பது என் தாழ்மையான அபிப்ராயம். மற்ற விஷயங்களை பிரசங்கிகள் இருவரும் விரிவாகப் பேசி விட்டனர் என நான் கருதுவதால் மேலே பேச விரும்பவில்லை. அடிக்கடி உங்கள் சங்கம் கூடி உபயோகமான தீர்மானங்களை நிறைவேற்றி அமுலுக்குக் கொண்டு வரவேண்டும் என்று கேட்கிக் கொள்கிறேன்." என்றார். (கரகோஷம்.)

தலைவி வந்தனோபசாரம் கூறினள். கூட்டம் கலைந்து எல்லோரும் வீடு திரும்பினர். விமலாவும், மற்ற இளம் உத்தியோகஸ்தர்களும் வாசுவையும், கலெக்டரையும் புகழ்ந்தவாறு அவர்கள் மாளிகைவரை வந்து போனார்கள். வாசுவும் தான் அதிகம் தவறுதலாகப் பேசவில்லை என்ற சாந்தி ஏற்பட சந்தோஷங் கொண்டான். ஸ்ரீ காந்தன் இவர்களைக் கேட்கு முன்பு கமலா, பிரசங்கியை அழைத்து வரட்டுமா? பிரசங்கியைப் பற்றி நான் சொல்லுவதை விட நீங்கள் அவர் பிரசங்கத்தைக் கேட்பது நலம். அழகுதானிது என்றாள். நால்வரும் சிரித்தனர்.

——(0)——

# பத்தாவது அத்தியாயம்

## பிரசங்க பலன்

தபால் என்ற சப்தம் காதில் கேட்டதும் ஒருவிதமான உணர்ச்சி உண்டாவது சகஜம். எதிர்பார்த்த நன்மை அல்லது எதிர்பாராத நன்மை ஏதாவது ஏற்பட்டிருக்கலா மென்னும் நம்பிக்கை உண்டாகிறது. விசேஷமான சங்கதிகள் அடங்கிய கடிதமாயு' மிருக்கலாம் என எண்ணுவோம். பிரித்துப் பார்த்தால் நாம் விரும்பாத விஷயங்க ளிருப்பது கண்டு வெறுப்படைவதும் உண்டு. கையில் தபால் கொடுக்கப்பட்டதும் மிகவும் அவசரமாக சில சமயங்களில் கடிதத்தையும் சேர்த்துக் கிழித்து விடுபவரும் உண்டு. இந்தத் தபால் என்ற சப்தம் பலவித மன எழுச்சிகளை உண்டாக்கி விடுகிறது.

சோமுவுக்குத் தபால் எழுதும் நண்பர்களோ உறவினர்களோ கிடையாது. தபால் என்ற சப்தம் கேட்டும் வீட்டிலுள்ள மற்றொரு குடித்தனக்காரர்களுக்காக இருக்கலாம் என நினைத்துப் பேசாம லிருந்தான். மறுபடியும் சப்தம் கேட்கவே, நாம் வாங்கி அவர்களிடம் கொடுத்து விடலா மென்று எழுந்தான். 'சோமநாதன்' என்ற குரல் கேட்டது. 'நமக்குத் தபாலா! இது என்ன? என்று மில்லாத சமாசாரம்? விசேஷமானது ஒன்று

யிருக்கப் போவதில்லை' என்று அலட்சியமாக கவரைக் கையில் வாங்கி ஞள். வாசுவின் எழுத்து எனத் தெரிந்ததும் அவசரமாகப் பிரித்தான்.

"பிரிய சோமு! நலம்—நல மறிய விருப்பம். நீ கற்றுக் கொடுத்த வாசகங்களெல்லாம் பிரயோசனமற்றுப் போய்விட்டது. அதை மறந்து விட்டேன். எதிர் பாராத ஆனந்தம் என்னைப் பிடித்துக் கொண் டிருக் கிறது.

எனக்கு என்ன வரவேற்பு—சொல்ல முடியாதது—எழுத முடியாதது. என் தகப்பனர் அவ்வளவு ஆனந்தமுட னிருக்கிறார். என் சகோதரியின் மனம் மாறிவிட்டதே காரணம். நான் இங்கு வந்ததை என் சகோதரி பெரிய பாக்யமாகவே கருதி யிருக்கிருள். இதைவிட என்ன சந்தோஷம் வேண்டும் மனிதனுக்கு? மாப்பிள்ளையும் திருந்திவிட்டதாகத் தெரிகிறது.

நான் உன் அன்பு மொழிகளின்படி என் தகப்பனரை அழைத்துவர சௌகரியப்படாது எனத் தெரிகிறது. வாழ்க்கையின் இன்பத்தை இப் பொழுதே அடைந்தேன். நான் மிகவும் ஆனந்தமாக சில நாட்கள் கழிந்த பின்பு அங்கு வருகிறேன். என் அன்புடன் கூடிய ஆசிகளை சுந்திராவுக் குச் சொல்ல வேண்டுகிறேன். பிற பின்.

உன் அன்புள்ள
வாசு.

"சுந்திரா! இங்கே வா. இந்தா இதைப் பார். சுத்த மோசமான பயல். கடிதம் எழுதவே தெரியவில்லை. உளறிக் கொட்டியிருக்கிருன். இவ்வளவு காலமாகியும் கடிதம் எழுதத் தெரிய வேண்டாமா? தமிழில் எழுதத் தெரியா விட்டால் இங்கிலீஷில் எழுதுவது தானே. அவன் கடிதம் எப்படியோ ஆரம்பித்து எப்படியோ முடிகிறது. கோவையாக சமாசாரங்கள் எழுத வேண்டாமா?"

"என்ன அண்ணு! யாருடமிருந்து கடிதம்? கையில் கடிதத்தை வைத் துக் கொண்டு வசைபுராணம் ஆரம்பித்து விட்டீர்களே. எங்கே பார்க் கலா" மெனக் கடிதத்தை வாங்கிப் படித்தாள். "நீங்கள் கூறியது சரிதான். கடிதம் எழுதிப் பழக்கமிருக்காது என நினைக்கிறேன். அல்லது அந்த எதிர் பாராத சந்தோஷத்தில் என்ன எழுதுவதென்றே தோன்றியிருக்காது. ஆயினும், உடனே நமக்குத் தகவல் தெரிவித்தது பற்றி நாம் சந்தோஷப்பட வேண்டியதுதான்."

"இப்பொழுதே அவனுக்குப் பரிந்து பேச ஆரம்பித்து விட்டாயே! அவன் சகோதரி நடந்துகொண்ட மாதிரிதான் என்னிடம் நீயும் பின்னல் நடந்துகொள்வாய்போ லிருக்கிறது."

"இதெல்லாம் தமாஷா? நான் அதுபோன்று நடந்து கொள்வேன் என நினைக்கிறீர்களா? போகட்டும்: அவருக்குப் பதில் எழுத வேண்டாமா?"

"பதில் எதற்கு எழுதுவது? நாளையே அவன் இங்கு வந்தாலும் வர லாம். ஆகவே அதற்கு அவசியமே யில்லை."

"அப்படி நான் கருதவில்லை. நாளை அவர் வரமாட்டார். நமது சந் தோஷத்தை அவருக்குத் தெரிவிப்பதுதான் முறை. அதனுல் சிறிது ஆதர வும், அன்பும் உண்டாகலாம்."

"ஆதரவு-அன்பு நன்ருக யிருக்கிறது. வேண்டுமானுல் நீயே எழுது. நான் ஆபீஸ் சென்று வரும்பொழுது கவர் ஒன்று வாங்கி வருகிறேன்."

"நான் எழுதுவது நன்ருயிராது. நீங்கள் தான் எழுத வேண்டும். ஆபிஸிலிருந்து வரும்பொழுது எழுதிப் போட்டு வாவேண்டும்."

"இது என்னால் முடியாது. இதற்கெல்லாம் சந்தோஷம் தெரிவிப்பது என்றால் நகைப்புக்கிடமாக வல்லவா ஆகும். நான் சொல்லியபடி நீயே எழுது."

"அது சரிதான். நீங்கள் சொல்லிக் கொடுத்த வாசகங்கள் மறந்து போய்விட்டது. எழுதியனுப்பு என்று எழுதியிருக்கிறாரே! அதற்கென்ன செய்யப் போகிறீர்கள்?"

"உன் வாடை அவனுக்கும் அடித்திருக்கிறது. குறும்புத் தனத்தில் வேடிக்கையாக எழுதியிருக்கிறான். எதற்கும் நீயும் ஒரு கடிதம் எழுது. நானும் எழுதுகிறேன். விலாசம் சப் கலெக்டர் மேல்பார்த்து என்று எழுது. மற்ற வேலைகள் ஏதாவதிருந்தால் கவனித்து விட்டு இதையும் எழுதி ஒரு கவர் செய்து ஒட்டிக்கொடு" என்றான் சோமு. சுந்திரா உள்ளே சென்றாள்.

"பிரிய நண்பரே!

தங்கள் கடிதம் பார்த்தேன். மிகவும் சந்தோஷம். என்றும் தாங்கள் ஆனந்தமுடனிருப்பதையே விரும்புவது என் வாழ்வின் குறிக்கோள். தங்கள் கடிதத்திற்கு என் நன்றியும் வணக்கமும்.

தங்கள் அன்பு சுந்திரா."

இதைக்கொண்டு தன் அண்ணனிடம் கொடுத்து "ஒரே கவரில் உங்கள் கடிதத்தையும் சேர்த்து அனுப்பிவிடுங்கள். அனாவசியமாக இரண்டு கடிதங்கள் வேண்டாம்" என்றாள்.

"இதிலேயே என் அண்ணனும் தம் சந்தோஷத்தைத் தெரிவிக்கச் சொன்னார் என்று எழுதிவிடு. நான் வேண்டுமாகில் விலாசம் எழுதிப் போட்டு விடுகிறேன்" என்றான் சோமு. பதில் சொல்லாதபடி சுந்திரா உட் சென்று விட்டாள். சோமுவும் ஒரு கடிதத்தில் இரண்டு வரிகள் எழுதித் தபாலில் அனுப்பிவிட்டான்.

மறுதினம் காலையில் கடிதம் வாசுவுக்குக் கிடைத்தது. எல்லோரும் அவனிடமிருக்கும்பொழுது கடிதம் திறந்து பார்த்தான். அவன் முகத்தில் சிறுநகை தோன்றி மறைந்தது. கமலா கடிதத்தைப் பார்க்க விரும்பினாள். மற்றவர் பார்க்கக் கூடாத சங்கதி என்ன இருக்கிறது என நினைத்து அவளிடம் கொடுத்தான். அவள் படித்த பின்பு தன் தகப்பனாரிடம் சுந்திரா என்ற கையெழுத்தை விரலால் காண்பித்துக் கொடுத்தாள். இதில் விசேஷம் ஏதோ இருக்கிறது என நினைத்து காந்தனும் அதனைப் பார்த்தார். எல்லோர் முகத்திலும் நகைப்பு தோன்றியது. வாசு இவர்கள் சிரிக்கும்படி என்ன இருக்கும் என யோசனை செய்தான். இதன் நடுவில் ஒருவர் வந்தார். அவன் யோசனை சிதறுண்டது.

"இவர் ஜில்லா போர்டு அஸிஸ்டெண்டு என்ஜினீயர். விசேஷ காரியமாக வந்திருக்கிறார். என்ன வாசு! அவருடன் பேசலாம் என நினைக்கிறேன்."

"நாங்கள் வேறு இடத்தில் இருக்கிறோம். நீங்கள் பேசிக்கொண்டிருங்கள். நாம் போகலாமே" என எழுந்தான் வாசு.

"நானும் அவரும் தனித்துப் பேசுவதாயிருந்தால் ஆபீஸ் அறைக்குச் செல்ல மாட்டேனா? உன் விஷயம் தான். அதனால் தான் பேசலாமா என்றேன்" என்றார் காந்தன்.

"என் விஷயமாகவா? இருக்க முடியாது. சரி, எப்படியிருந்தாலும் நீங்கள் சொல்லியபடியால் நான் இருப்பதில் ஆட்சேபனையில்லை" என்றான் வாசு.

(தொடரும்.)

# தாரண ஸூ ஆடிமீ நவக்கிரக * நிராயன சுத்த ஸ்புடம்

(இந்தியா ஸ்டாண்டர்ட் கடிகாரமணி-சென்னை காலை 6½-மணிக்கு)

| தேதி | நக்ஷத்திர ஹோரை | | | சூரியன் | | சந்திரன் | | அங்காரகன் | | புதன் | | குரு | | சுக்கிரன் | | சனி | | †ராகு | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | ம | வி | ச | பா | க | பா | க | பா | க | பா | க | பா | க | பா | க | பா | க | பா | க |
| 1 | 19 | 34 | 56 | 90 | 19 | 40 | 19 | 129 | 25 | 105 | 55 | 125 | 03 | 95 | 35 | 70 | 22 | 94 | 48 |
| 2 | 19 | 38 | 53 | 91 | 17 | 53 | 35 | 130 | 02 | 107 | 44 | 125 | 15 | 96 | 49 | 70 | 29 | 94 | 45 |
| 3 | 19 | 42 | 49 | 92 | 14 | 66 | 23 | 130 | 39 | 109 | 30 | 126 | 26 | 98 | 03 | 70 | 37 | 94 | 42 |
| 4 | 19 | 46 | 46 | 93 | 11 | 79 | 10 | 131 | 16 | 111 | 16 | 125 | 38 | 99 | 16 | 70 | 44 | 94 | 39 |
| 5 | 19 | 50 | 42 | 94 | 08 | 91 | 33 | 131 | 63 | 112 | 58 | 125 | 50 | 100 | 30 | 70 | 51 | 94 | 36 |
| 6 | 19 | 54 | 39 | 95 | 06 | 103 | 55 | 132 | 30 | 114 | 40 | 126 | 02 | 101 | 44 | 70 | 58 | 94 | 32 |
| 7 | 19 | 58 | 35 | 96 | 03 | 116 | 27 | 133 | 07 | 116 | 19 | 126 | 14 | 102 | 58 | 71 | 05 | 94 | 29 |
| 8 | 20 | 02 | 32 | 97 | 08 | 128 | 00 | 133 | 44 | 117 | 57 | 126 | 26 | 114 | 11 | 71 | 13 | 94 | 26 |
| 9 | 20 | 06 | 28 | 97 | 58 | 139 | 52 | 134 | 21 | 119 | 32 | 126 | 38 | 105 | 25 | 71 | 20 | 94 | 23 |
| 10 | 20 | 10 | 25 | 98 | 55 | 151 | 43 | 134 | 58 | 121 | 07 | 126 | 50 | 106 | 39 | 71 | 27 | 94 | 20 |
| 11 | 20 | 14 | 21 | 99 | 52 | 163 | 37 | 135 | 35 | 122 | 38 | 127 | 02 | 107 | 53 | 71 | 34 | 94 | 17 |
| 12 | .0 | 18 | 18 | 100 | 50 | 175 | 30 | 136 | 13 | 124 | 09 | 127 | 15 | 109 | 07 | 71 | 42 | 94 | 13 |
| 13 | 20 | 22 | 14 | 101 | 47 | 187 | 36 | 136 | 50 | 125 | 37 | 127 | 27 | 110 | 21 | 71 | 49 | 94 | 10 |
| 14 | 20 | 26 | 21 | 102 | 45 | 199 | 43 | 137 | 37 | 127 | 04 | 127 | 39 | 111 | 35 | 71 | 56 | 94 | 07 |
| 15 | 20 | 30 | 18 | 103 | 42 | 212 | 30 | 138 | 04 | 128 | 28 | 127 | 51 | 112 | 49 | 72 | 03 | 94 | 04 |
| 16 | 20 | 34 | 15 | 104 | 40 | 225 | 17 | 138 | 42 | 129 | 51 | 128 | 04 | 114 | 03 | 72 | 10 | 94 | 01 |
| 17 | 20 | 38 | 11 | 105 | 37 | 238 | 52 | 139 | 29 | 13, | 11 | 128 | 16 | 115 | 17 | 72 | 17 | 93 | 57 |
| 18 | 20 | 42 | 08 | 106 | 34 | 252 | 27 | 139 | 56 | 132 | 30 | 128 | 29 | 116 | 31 | 72 | 24 | 93 | 54 |
| 19 | 20 | 46 | 04 | 107 | 31 | 276 | 50 | 140 | 33 | 133 | 46 | 128 | 41 | 117 | 45 | 72 | 30 | 93 | 51 |
| 20 | 20 | 50 | 01 | 108 | 29 | 281 | 14 | 141 | 11 | 135 | 01 | 128 | 54 | 118 | 58 | 72 | 37 | 93 | 48 |
| 21 | 20 | 53 | 54 | 109 | 26 | 296 | 09 | 141 | 49 | 136 | 12 | 129 | 06 | 120 | 12 | 72 | 44 | 93 | 45 |
| 22 | 20 | 57 | 51 | 110 | 24 | 311 | 04 | 142 | 27 | 137 | 23 | 129 | 19 | 121 | 26 | 72 | 51 | 93 | 42 |
| 23 | 21 | 01 | 47 | 111 | 21 | 325 | 58 | 143 | 05 | 138 | 30 | 129 | 31 | 122 | 40 | 72 | 58 | 93 | 39 |
| 24 | 21 | 05 | 44 | 112 | 18 | 340 | 51 | 143 | 42 | 139 | 36 | 129 | 44 | 123 | 54 | 73 | 04 | 93 | 35 |
| 25 | 21 | 09 | 40 | 113 | 15 | 355 | 29 | 144 | 20 | 140 | 37 | 129 | 57 | 125 | 08 | 73 | 11 | 93 | 32 |
| 26 | 21 | 13 | 37 | 114 | 13 | 9 | 44 | 144 | 58 | 141 | 38 | 130 | 10 | 126 | 22 | 73 | 18 | 93 | 29 |
| 27 | 21 | 17 | 33 | 115 | 11 | 23 | 28 | 145 | 35 | 142 | 34 | 130 | 23 | 127 | 36 | 73 | 24 | 93 | 26 |
| 28 | 21 | 21 | 30 | 116 | 09 | 37 | 11 | 146 | 13 | 143 | 30 | 130 | 35 | 128 | 50 | 73 | 31 | 93 | 23 |
| 29 | 21 | 25 | 26 | 117 | 06 | 50 | 13 | 146 | 51 | 144 | 20 | 130 | 48 | 130 | 04 | 73 | 37 | 93 | 20 |
| 30 | 21 | 29 | 23 | 118 | 04 | 63 | 15 | 147 | 29 | 145 | 09 | 131 | 01 | 131 | 18 | 73 | 43 | 93 | 16 |
| 31 | 21 | 33 | 19 | 119 | 01 | 75 | 47 | 148 | 07 | 145 | 53 | 131 | 14 | 132 | 32 | 73 | 49 | 93 | 13 |

**ஆகாயக் காட்சி:-**

3உ பிற்பகல் மணி 3-00கு சசிக்கு வடக்கில் பா 1 - 40ல் சனியும்,
6உ பின் இரவு ,, 2-30க்கு ,, ,, பா 0 - 20ல் சுக்ரனும்,
7உ காலை ,, 7-34க்கு ,, தெற்கில் பா 0 - 40ல் புதனும்,
7உ பின் இரவு ,, 3-14க்கு ,, ,, பா 1 - 59ல் குருவும்,
8உ மாலை ,, 6-18க்கு ,, ,, பா 1 - 54ல் குஜனும்,
30உ பின் இரவு ,, 2 க்-50கு ,, வடக்கில் பா 0 - 50ல் சனியும்,
5உ முற்பகல் பார்ஸாவ சூர்ய கிரஹணம். சந்திர சமாகமம்.

**பிரவேசங்கள் முதலியன:**—9உ பிற்பகல் மணி 1-34க்கு புதனும், 20உ பின் இரவு மணி 2-36க்கு சுக்ரனும், 31உ காலை மணி 6-41கு சூர்யனும் ஸிம்மத்திற்குப் பிரவேசிக்கின்றன. 13உ சுக்ரன் மேற்கில் உதயம். 31உ குரு மேற்கில் மகாஸ்தமனம். இம்மாதம் முழுவதும் புத-சுக்ர ஸாமீப்யம்.

---

* அயனாம்சம் பா-22 கலை-57 விகலை 01·8305 கூட்ட சாயன ஸ்புடம் வரும்.

† ஆறு ராசி அல்லது பாகை 180 கூட்ட கேது ஸ்புடம் வரும்.

# “ஆனந்தபோதினி” பஞ்சாங்கம்.

தாரண௵ ஆடி௴ கலியுகாதி 5046, சாலிவாகனம் 1867
பசலி 1353-54, கொல்லமாண்டு 1119, ஹிஜிரா 1363
இங்கிலீஷ் 1944௵ ஜூலை௴—1944௵ ஆகஸ்ட்௴

| ஆடி௴ | ஜூலை௴ | வாரம். | திதி. | நக்ஷத்ரம் | யோகம். | விசேஷங்கள் |
|---|---|---|---|---|---|---|
| 1 | 16 | ஞா | ஏ10-47 | கிரு1-49 | சித்60 | காமிய ஏகாதசி |
| 2 | 17 | திங் | து8-23 | ரோ1-13 | அமி60 | பிரதோஷம், கரிநாள் |
| 3 | 18 | செவ் | திர7-12 | மிரு1-51 | சி2-51ம | மாஸ சிவராத்திரி |
| 4 | 19 | புத | ச ● 7-49 | திரு3-35 | சித்60 | சர்வத்ர அமாவாஸ்யை, ஸத்யாதிஸ தீர்த்த புண்யதினம் |
| 5 | 20 | வியா | அமா9-07 | புன6-11 | அமி60 | பார்ஸுவ சூர்ய கிரஹணம் |
| 6 | 21 | வெள் | பிர11-25 | பூச10-48 | சி10-48ம | சிரவண சுத்தம் |
| 7 | 22 | சனி | துதி15-07 | ஆ16-13 | ம16-13அ | சந்திர தர்ஸனம் |
| 8 | 23 | ஞா | திரு18-36 | மக22-12 | ம22-12சி | மது ஸ்ராவம் |
| 9 | 24 | திங் | சது24-09 | பூர28-19 | சித்60 | சதுர்த்தி விரதம் |
| 10 | 25 | செவ் | பஞ்28-50 | உத்34-47 | அ34-47சி | கருட-நாக பஞ்சமி |
| 11 | 26 | புத | சஷ்33-35 | அ40-51 | ம40-51சி | சூர்யஹாலா சஷ்டி [தினம் |
| 12 | 27 | வியா | சப்37-51 | சித்46-13 | சி46-13அ | ஸத்ய விரத தீர்த்த புண்ய |
| 13 | 28 | வெள் | அ40-47 | சு51-06 | சித்60 | ஸ்ரீ சுந்திரமூர்த்தி சுவாமிகள் திருநட்சத்திரம் |
| 14 | 29 | சனி | நவ42-38 | வி54-11 | சித்60 | |
| 15 | 30 | ஞா | தச43-12 | அ55-48 | மர60 | |
| 16 | 31 | திங் | ஏ42-06 | கே56-23 | சித்60 | |
| | 1944௵ ஆகஸ்ட்௴ | | | | | |
| 17 | 1 | செவ் | துவ40-12 | மூல56-02 | அ56-02சி | |
| 18 | 2 | புத | திர37-17 | பூ55-17 | அமி60 | |
| 19 | 3 | வியா | சசி33-35 | உத்52-49 | சித்60 | |
| 20 | 4 | வெள் | ப○28-53 | திரு49-12 | ம49-12சி | |
| 21 | 5 | சனி | பிர22-47 | அ45-36 | சி45-36அ | |
| 22 | 6 | ஞா | துதி16-51 | சத42-07 | சித்60 | |
| 23 | 7 | திங் | திரு10-43 | பூர37-52 | ம37-52சி | சங்கட சதுர்த்தி |
| 24 | 8 | செவ் | சது4-49<br>பஞ்58-53 | உட்33-35 | அ33-25சி | அவமாகம், ஆயுதம் பயில மந்திரார்த்தங்கள் |
| 25 | 9 | புத | சஷ்53-27 | ரே29-24 | மர60 | |
| 26 | 10 | வியா | சப்48-37 | அசு25-47 | அ25-47சி | ஸீதல ஸப்தமி-ஸீதல விரதம் |
| 27 | 11 | வெள் | அ43-47 | ப※23-23 | சித்60 | கிருத்திகை விரதம் |
| 28 | 12 | சனி | நவ40-13 | கிரு21-35 | அமி60 | ஸ்ரீ ஜயந்தி |
| 29 | 13 | ஞா | தச37-48 | ரோ20 58 | சித்60 | தெய்வகதமான சுபகரங்கள் |
| 30 | 14 | திங் | ஏ36-35 | மிரு21 07 | அ21-07சி | அஜ ஏகாதசி |
| 31 | 15 | செ | து37-13 | திரு22-10 | ம22-10சி | ஜயந்தி துவாதசி, மககார்த்திகை கா-59 வி-11 |

சனி
சூரி
பு-சு
ரா
9-சிம்-புத
20-சிம்-சுக்
31-சிம்-சூர்
கே
செ
கு

Edited, Printed & Published by N. Munisawmy Mudaliar,
At The “Ananda Bodhini” Press,
No 6, Lawyer Chinnathambi Mudali Street, Madras

# அயத்தங்கத் திராவகம்

மித்திரர்களே! இந்த அபூர்வ மருந்தானது அநேக கொடிய வியாதிகளை ஆச்சரியமாகக் கண்டிக்கக் கூடியது. இதை அநேக ஆயிரக் கணக்கான ஜனங்கள் உபயோகித்துச் சந்தோஷிக்கின்றனர். வியாதியினாலாவது வேறு எந்தக் காரணத்தினாலாவது இளைத்துப்போயிருக்கும் தேகத்தைப் புஷ்டியாக்கி பலவிருத்தி தருவதில் இது நிகரற்ற மருந்தாகும். ஆங்கிலேய முறைப்படி தயாரிக்கப்பட்ட அருமையான மருந்து. சாப்பிடுவதற்கு மிக இன்பமாயிருக்கும். இருமல் நோய்கண்டு அவஸ்தைப்படுபவர்கள் இதை உட்கொண்டால் இரண்டே வேளையில் ஆச்சரியமான சுகத்தை யடைவார்கள். இதனால் உண்டாகக் கூடிய அநேக குணங்களில் முக்கியமான சிலவற்றை இங்கே குறிக்கிறோம்.



இது, நரைத்த மயிரைக் கருப்பாக்கும், உஷ்ணத்தினாலாவது, புழு வெட்டினாலாவது மயிர் உதிர்வதை நிறுத்தும்: இதனால் நீர் வியாதிகள் தீரும். கண்ணெரிச்சல், கை கால் காந்தல் இவை தீரும். இன்னும் இது முக வசிகரத்தை உண்டாக்கும். தேக அசதியை யோட்டும். ஜீரண சக்தியையும், நல்ல பசியையும் உண்டாக்கும். மனதை அதிக உற்சாகப்படுத்தும், நரம்புகளுக்கு அதிக வலுவைத் தரும், தேகத்தில் நல்ல இரத்தத்தைச் சுரப்பிக்கும், க்ஷயரோகத்தை க்ஷணத்தில் தீர்க்கும், சத்த தாதுக்களுக்கும் நல்ல பலத்தை தரும், மூலச்சூடு, மூலவாய்வு, மலச்சிக்கல் ஆகியவை தீரும்.

இந்தச் சஞ்சீவியை நல்ல போஜனத்துடன் 15 நாள் சாப்பிட்டால் இணையில்லாத ஆனந்தத்தைத் தரும். மனிதர் தாம் இழந்துபோன தேக திடத்தைப் பழையபடி யடைவதற்கு இதைவிட வேறு மருந்தே கிடையாது. ஒருவர் 40-நாள் மருந்தை உட்கொள்ளும் பக்ஷத்தில் அவனுடைய தேகம் வஜ்ஜிரமேயாகும். இதற்கு யாதொரு பத்தியமும் கிடையாது.

20-நாள் மருந்து விலை ரூபா 1. 40-நாள் மருந்து விலை ரூபா 1-12-0.

# நரை மயிர் கருக்குந் தைலம்



தற்காலத்தில் பலவிதமாகச் செய்து விற்கப்பட்டு வருகிற கப்புகள் மயிரைச் செம்பட்டையாகவும், பசுமை நிறமாகவும், சாம்பல் வர்ணமாகவும் ஆக்கி விகாரப்படுத்தி விடுகின்றன. நமது தைலமோ நரைத்த மயிருக்குப் பூசிய 3 நிமிஷத்திற்குள்ளாக நரைப்பதற்கு முன்பிருந்த கருமை நிறத்தையும் பளபளப்பையும் உண்டுபண்ணும், மேலே கூறியுள்ள விகார குணங்கள் இதில் உண்டாகமாட்டா. இதைப் பூசிய பிறகு முகலட்சணமும் வசீகரமு முண்டாகிறபடியால் வயோதிகரும் வாலிபரைப்போல் தோற்றப்படுவார்கள். இதை உபயோகிக்கும் விதம் பார்சலோடு தெரிவிக்கப்படும். இதன் விலை ரூபா 1.

---

ஆனந்தபோதினி ஆபீஸ், தபால் பெட்டி நெ. 167, மதராஸ்.

# சர்வமேக நிவாரணத் தைலம்




இந்தப் பிரசித்திபெற்ற இராஜ சஞ்சீவி திராவகத்தை, காலை மாலை இரண்டு வேளைகளிலும் 10-நாட்கள் வரை உட்கொண்டால் வெகு நாட்களாகத் தேகத்தில் ஊறிய மேக ரோகங்கள், மேக வாயு, தனுர்வாதம், முழங்கால் வாதம், குதிகால் வாதம், சகலமான தடிப்புகள், மேகரோகத்தால் உண்டான வெடிப்பு இரணங்கள், குழிப் புண்கள், புரையோடுகிற புண்கள், திமிர் வாய்வு, கைகால் விரல்களில் மேகநீர் தங்கிய நோய்கள், கிரந்தி முதலிய கிரந்திப் புண்கள், துடைவாழை படைகள், நகக்கணுநோய், சகல மூலங்கள் முதலிய ரோகங்கள், நெருப்பிலிட்ட பஞ்சு போல் போகும். இது அநேக ஜனங்களின் துன்பத்தை நீக்கி சௌக்கியத்தை உண்டு பண்ணி அதிக அனுபவத்திற்கு வந்தது. கடின பத்தியமின்றி, பால், நெய், கறி முதலியவைகளுடன் சாப்பிடக்கூடியதும், தேக இளைப்பு, ஆயாசம் முதலியவைகளை உண்டாக்காமல் சுகமாக்கி வியாதிகளைக் கண்டித்துச் சுகப்படுத்தக்கூடியதுமாகிய உண்மையான மருந்து.

இதன் விலை ரூபா 1—8—0. தபாற்கூலி வேறு.

## எலிக்ஸைரன்

மேகரோக நிவாரணி!
தாது விருத்திக்கு நிகரற்றது !!

மலையாள அஷ்டாங்க முறைப்படி மலையாளத்தில் தயார் செய்தது.

பத்தியம் கிடையாது. ருசிகரமானது. இரத்த சுத்திக்கும் இரத்த விருத்திக்கும், தசை விருத்திக்கும், தாது பலத்திற்கும் இது ஒரு அமிர்த சஞ்சீவியாகும். நாள்பட்ட வெள்ளை, வெட்டை, மேகவியாதி, துர்நீர், மூலச்சூடு, நரம்புத் தளர்ச்சி, வீரியக் குறைவு, லிங்கப்புண், லிங்கப் புற்று, மேகப் படைகள், உடம்பு ஊரல், அஜீரணம், மலச்சிக்கல், கைகால் நோவு, மயக்கம், இடுப்பு வலி, மூத்திரநோய் முதலிய எல்லாவிதமான மேக வியாதிகளைப் போக்கி, புத்துயிர் அளித்து இல்லற இன்பத்தை அனுபவிக்கச் செய்து, யௌவனத்தைத் தரும். ஆண் பெண் யாவரும் சாப்பிடலாம்.

**20-நாள் மருந்து 40-வேளைக்கு (பூரண குணத்துக்குப் போதுமானது) ரூபா 2-4-0**

## குன்மக் குடாரி

ஸ்டமக் பவுடர்:
ஆபரேஷன் தேவையில்லை:

சகலவித வயிறுவலியையும் **Appendicitis** என்னும் வயிற்றிலுண்டாகும் வியாதியையும், புண்களையும், வயிற்றை ஆபரேஷன் செய்யாமல் இம்மருந்து உத்தரவாதத்துடன் குணப்படுத்தும். இம்மருந்து மலையாள அஷ்டாங்க முறைப்படி தயார் செய்தது. (அல்சர்), அஜீரணம், மலபந்தம், குடலிரைக்கல், புளியேப்பம், வயிற்றுக்குத்தல், குடல்புண், ரணம், சதை வளருதல், [illegible], வாயில் சதை வளருதல், குன்மம், சாப்பிடும் முன்னும் பின்னும் வயிற்றில் உண்டாகும் வலி இன்னும் பலவிதமான வியாதிகளையும் குணப்படுத்தும். **[illegible]0-நாள் 60-வேளை மருந்து விலை ரூபா 2-8-0**

**தனலட்சுமி கம்பெனி, நெ. 6, லயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்**

# கோசார பல நிர்ணயம்

ஸ்ரீமான் என். ஆர். திருவேங்கடாச்சாரியார், பி. ஏ. எழுதியது.

கோசார பலன்கள் நடைபெறுவது பல்வேறு அம்சங்களைப் பொறுத்திருக்கிறது என்ற விஷயத்தை விரிவாக ஆசிரியர் இந்த நூலில் குறிப்பிட்டிருக்கிறார். அது மாத்திரமில்லை. கோசார சம்பந்தமாகவுள்ள பலவேறு புராதன கிரந்தங்களில் காணப்படும் எல்லா முக்கிய விஷயங்களையும் ஆசிரியர் உருட்டித் திரட்டிக் கொடுத்திருப்பது இதிலுள்ள முக்கிய விசேஷமாகும். மாத வார தின பலன்களையும், ஆதாய விரய பலன்களையும், ரோக மேற்பட்ட நக்ஷத்திரத்தைக் கொண்டு ரோகம் நீங்கக்கூடிய காலத்தையும் கண்டறியும் விவரம் முதலிய பல உபயோகமான விஷயங்களை ஆசிரியர் இதில் சேர்த்திருக்கிறார். தமிழ் நாட்டில் ஒவ்வொருவர் கையிலுமிருக்கவேண்டிய நூலாகும். இதன் விலை அணா **8.**

ஸ்ரீமான்-ஆரணி குப்புசாமி முதலியார் எழுதியது

# கற்கோட்டை

இதில் தேசப் பிரஷ்டமடைந்த சில உயர்குல மகுடவர்த்தனர்கள் தலைமறைந்து வசிக்கும்போது, நெஞ்சு திடுக்கிடும் பிராணாபத்துகளில் சிக்கிக்கொள்வதும், அவற்றினின்று தப்பித்துக்கொள்ள அவர்கள் செய்யும் வீர தீர சாமர்த்தியச் செயல்களும், சொல்லொணா வியப்பையும் சோகத்தையும் வீரரசத்தையும் காட்டும். சில ஸ்திரீகளின் அற்புத நடக்கைகளும், துணிகரமான தீரச்செயல்களும், தம் காதலரிடத்தில் மெய்க்காதல் கொண்ட உத்தம ஸ்திரீகள் தம் காதலர் பொருட்டாய் எவ்வளவு வரையில் ஆடவருக்குச் சமமாய் நடந்துகொள்ளச் சக்தியுடையவர்களா யிருக்கிறார்களென்பதும் இக் கதையால் நன்கு விளங்கும்.

விலை ரூபா **2—8—0**

## கற்பகச் சோலையின் அற்புதங் கொலை

இது இரும்பைக் காந்தம் இழுக்கின்றவாறு போல் படிப்பவரின் மனதை இழுத்து எல்லோருக்கும் ஆனந்தத்தையும் அற்புதத்தையும் உண்டாக்கத் தக்கது.

இதன் விலை ரூபா 1—8—0.

## அர்ஜுனஸிங்கும், சுந்தரும்

இதில் இரண்டு துப்பறியும் நாவல்கள் அடங்கி யிருக்கின்றன. இவற்றுள் துப்பறியும் நிபுணர்கள் சாமர்த்தியமாகக் குற்றவாளிகளைக் கண்டுபிடிப்பதோடு ஒரு குரங்கும் கிளியும் மர்மமான கொலைக்கேஸை வெளியாக்குவது விநோதமாயிருக்கும்: குற்றம் வெளியாகியும் குற்றவாளி விடுதலை யடைதல் ஆச்சரியமாயிருக்கும்.

இதன் விலை அணா **3.**

**ஆனந்தபோதினி காரியாலயம், சௌகார்பேட்டை, சென்னை.**

